யானும் அலமேல் மங்கை நாச்சியாரும் நாள்வழி தத்தியொதந அவசரத்துடனே பஞ்சதாரைப்பொங்கல் அமுது செய்தருள விஜய நகரத்தில் மால்லியவந்த [கிரி செனைத் தலைவனுன] லக்கப்ப நாய்க்கர் குமாரர் அனுமயர் அண்ணங்கார் வருஷந்தொறும் மூந்நூற்று அறுபத்தைந்து ரெகைப்பொன் அளிக்கக்கூடிய நிலம் அளித்த செய்தியைத் தெரிவிப்பது.

திருப்பதி தேவஸ்தான சாசனங்கள், VI வால்யூம், 14 நெ. ஆக வெளியாகி யுள்ளது.

சாசனம்—934] [D.2774-எ

சம்பங்கிப் பிரதக்ஷிணம் என்னும் இரண்டாம் பிராகாரத்துத் தென்புறத்துத் திருமதிலில் உள்ளது.

சகம் 1123, குரோதனஸு பூர்வபக்ஷத்து ஏகாதசியும் வெள்ளிக்கிழமையும் கொண்ட பூசத்து நாள் கல்வெட்டு. தன் ஜன்ம நக்ஷத்திரம் பூரத்திலும் தன் தாயார் நக்ஷத்திரம் மிருகசீரிஷத்திலும் செனை முதலியார் ஆட்டை நக்ஷத்திரம் அற்பசிப் பூராடத்திலும் திருவெங்கடமுடையானுக்கு அதிரசப்படி அமுது செய்தருள உத்தண்டராயர் உலகப்பன் எண்ணூற்று நாற்பது பணம் அளித்த செய்தியைத் தெரிவிப்பது.

திருப்பதி தேவஸ்தான சாசனங்கள், III வால்யூம், 5 நெ. ஆக வெளியாகியுள்ளது. அதிலே சாசனத்தின் காலம் சகம் 1427, குரொதன ஸு மீந மாசம் பூர்வபக்ஷத்து எகாதசி வியாழக்கிழமை பூசம் என்று காணப்படுகிறது. அது கி. பி. 1506, மார்ச்சு மீ 5 ௳ ஆகும்.

சாசனம் — 935] [D. 2774-அ

உள் விமானம் தென்னண்டையில் இருக்கிற சாசனம்.

சகாப்தம் 1385, சுபானுஸு துலாமாசம் பூர்வ பக்ஷத்து ஸப்தமியும் செவ்வாய்க்கிழமையும் பெற்ற உத்திராடத்து நாள் கொண்ட கல்வெட்டு. திருவெங்கடமுடையான் சிறுகாலைச்சந்தியுடனே நால்வழி நாலு திருப்பொனகம் அமுது செய்தருள நரசிங்கராஜ உடையார் தர்மமாகச் சாளுவ குண்டுராச உடையார் குமாரர் திம்மராச தெவ மகராச உடையர் பொன்இட்டுச் சிறுபாடி எல்லையில் தலைப்பரிசு இட்டுக் கால் வெட்டுவித்து அவிலாவியில் பயிர் ஏற்றிய செய்தியைத் தெரிவிப்பது.

திருப்பதி தேவஸ்தான சாசனங்கள், II வால்யூம், 17 நெ. ஆக வெளியாகியுள்ளது.

சாசனம்—**936**] [D. 2774-க

*தேரோடும் வீதியில் தென்னண்டைத் திருமதில்பேரில் உள்ள சாசனம்.*

*விஜயநகர மன்னனான ஸ்ரீ வீர அச்சுதராயர் மகாராயர் ஆட்சிக் காலத்தில் சகம் 1458, துற்முகி ஷு மிதுன மாசம் பூர்வபக்ஷம் திரிதியை சுக்கிரவாரம் பெற்ற திருவெணத்து நாள் கொண்ட கல்வெட்டு. திருவெங்கடமுடையான் சில விசேஷ தினங்களில் தோசை அமுது செய்தருளச் சந்திரகிரி வியாபாரிகளில் வெணந்தி கொத்திரத்து கொம்மூர் செவ்வு செட்டி மகன் கிருஷ்ணப்ப செட்டி அறுநூற்று நாற்பது பணம் அளித்த செய்தியைத் தெரி விப்பது.*

திருப்பதி தேவஸ்தான சாசனங்கள், IV வால்யூம், 87 நெ. ஆக வெளி *யாகியுள்ளது. அதிலே மாசமும் திதியும் மகரமாசம் பூர்வபக்ஷத்துத் துவி தியை என்று காணப்படுகின்றன.*

சாசனம் — **937**] [D. 2774-ம

*தேரோடும் வீதியில் தென்னண்டைத் திருமதிலில் உள்ளது.*

*விஜயநகர அரசனான ஸ்ரீ வீர சதாசிவ மஹாராயர் ஆட்சிக் காலத்தில் சகம் 1466, விசுவாவசுஷு து[லா*] மீ அபர பக்ஷத்து ஸப்தமியும் சோம வாரமும் பெற்ற பூசத்து நாள் கொண்ட கல் வெட்டு. திருவெங்கடமுடையான் நாள்வழி ஒரு திருப்பொன கம் அமுது செய்தருளவும் மலை குனிய நின்ற பெருமாள் ஏகா தசியில் திருச்சையில் ஏறி அருளும்பொது அப்பப்படி அமுது செய்தருளவும் குமார தாத்தய்யங்கார் சிஷ்யனும் ரெட்டி பூமி யில் அதிரலெ கொத்திரத்துப் பாலிகி கொப்பு நாயக்கர் மகன் அனுமய்யன் மூவாயிரத்து எழுநூற்று ஐம்பது பணம் அளித்த செய்தியைக் கூறுவது.*

திருப்பதி தேவஸ்தான சாசனங்கள், V வால்யூம், 56 நெ. ஆக வெளி *யிடப்பட்டது.*

நெல்லூர் (Nellūr) Nellore

*இதுவும் ஆந்திர ராஜ்யத்திலே இப்போது ஒரு ஜில்லாவின் தலை நக ராக இருக்கிறது. சாசனங்களில் இவ்வூர் 'படைநாட்டு நெல்லூரான விக் கிரம சிங்கபுரம்' என்று குறிக்கப் பெறும். ஊரிலே இப்போது ரங்கநாய*

குல ஸ்வாமி கோவில் என்று வழங்கப் பெறும் கோவிலில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமான் சாசனங்களில், 'திருப்பாற் கடல் சித்திர மெழி விண்ணகரம் பள்ளிகொண்ட பெருமாள்' என்று பெயர் பெறுவர்.

அந்தக் கோவிலில் காணும் சாசனங்கள்.

சாசனம்—938] [D. 3362-1

கோவிலிலே இது பொறிக்கப்பெற்றுள்ள இடம் குறிக்கப் பெறவில்லை. எனினும் இது கர்ப்ப கிருகம் மேல்புறச் சுவரில் எழுதியிருப்பதாகத் தெரிகிறது.

இது நெல்லூர் ஜில்லா சாசனங்கள், II பாகம், 830-32 பக்கங்களில் நெல்லூர் 61 நெ. ஆக வெளியாகியுள்ளது. தென்னிந்திய சாசனங்கள், V வால்யூம், 496 நெ. ஆகவும் வெளியாகியிருக்கிறது. அவ்விடங்களில் காண்பதுபோல் இல்லாமல் மக்கென்ஸியின் பிரதியில் சாசனம் பூர்த்தியாகக் கிடைக்கிறது.

(No. 197 of 1894). [On the west wall of the central shrine in the Ranganayakulasvāmin temple at the place.]

Record dated in the *th year, Āvaṇi in the reign of the Paṇḍyan king Tribhuvana chakravartin Kōnērinmaikoṇḍān **Sundara Pandyadeva** registering the tax-free (*sarvamānya*) gift as tiruviḍaiyaṭṭam of the village Māvaḍikkuṇḍai in Muṇḍa-nāḍu to meet the expenses of worship and offerings to god Paḷḷikoṇḍa-Āḻvār in Tirup-paṟkaḍal Chittiramēḻi-viṇṇagaram at Nellūr *alias* Vikramasimhapuram, a village in Paḍai-nāḍu, a sub-division of Chēdikula-māṇikka-vaḷanāḍu.

This has been published as Nl. 61 in the **Nellore District Inscriptions**[1] and as No. 496 in the **South Indian Inscriptions (Texts)**, Vol. V.

ஸ்வஸ்தி ஸ்ரீ [॥*] திருபுவன சக்கிறவற்த்திக[ள்] கொண்டான்னன்மை கொண்டான்[2] சுந்தர பாண்டியன் தெவர்க்கு யாண்டு

1. A collection of the inscriptions on Copper-plates and stone in the Nellore District made by Alan, Butterworth, I.C.S., and V. Venugopaul Chetty, I.C.S.

2. 'கொனெரின்மை கொண்டான்' என்று வாசிக்க.

[...]ாது ஆவணி மீ கஉ [செதி*]குல மாணிக்க வள(ர்)நாட்டு படை நாட்டு நெல்லூரான விக்கிற[ம*] சிங்கபுரத்துத் திருப்பாற் கடல் சித்திர மெழுசு விணங்கராக பள்ளி கொண்ட ரங்கனுயகற் [க்கு*][1] நம் பெரால் கட்டின சுந்திர பாண்டியன் சந்திக்குசு திருனுளுக்கு[ம்*] அமுது படி சாத்துபடி உள்ளிட்டு வெண்டும் நித்த நிமன் தங்களுக்கு மு[ண்*]ட ஞட்டு மாவடிக் கொண்டை ஞன்ங்கெல்லைக்குள்ப்பட்ட நானு நிலமும்[2] கருஞ்சையும் புஞ் சையும் நத்தமும் தொட்டமும் குளமும் குளப் பரிவ்வும் மற வமாப்பெறபட்ட வையிற்கு யுருவகக்குசு கடமையுடனெ வரி(ச்) சித்த[ா*]யமும் மாதவம ாப்பெறப்பட்ட வரிகளுஉ[3] உட்பட சறுவ மானியம்ம்(த்) திருவிடையாட்டமாக இடப்பெற வெணு மென்று காலிங்கராயர் (சொன்ன) சொன்னமயில் ருவாவாம வார்க்கு[4] சந்திராதித்தவரை செ(ா)லிவ[த]ாக (ளு)[இ]வ்வூர்க் குடுத்தொஉ. இது வெ[லக்*]கிறுருண்டாக்[கில்*]க் கெங்கைக் கரையில் காராம் பசுவைக் கொன்ற பாவஉ. உ

சாசனம் — **939]** *[D. 3362-2*

[அதே இடத்தில் உள்ளது.]

நெல்லூர் ஜில்லா சாசனங்கள், II பாகம், 832-33 பக்கங்களில் நெல்லூர் 62 செ. ஆக வெளியாகியுள்ளது.

இதுவும் தென்னிந்திய சாசனங்கள், V வால்யூம், 493 செ. ஆக வெளியாகியுள்ளது. அதிலே கிழமை '.........ய்க் கிழமை' என்று காணப் படுகிறது. அவ்விடங்களில் காணப்படுதுபோல் குறையாக இல்லாமல் பூர்த்தி யாகக் கிடைப்பதால் இங்கே கொடுக்கப்பட்டிருக்கிறது.

(No. 194 of 1894). [At the same place.] Record dated in S'aka 1221, corresponding to the 9th year, Makara, S'u. dvitīya, Monday, Anuradha in the reign of **Sri Ranganatha** *alias* **Raja Gandagopala deva** registering the gift of the village Taṅgalkoṇḍai to meet the

---

1. 'சித்திரமொழி விண்ணகரம் பள்ளி கொண்டாழ்வார்க்கு' என வாசிக்க.

2. 'நீர் நிலமும்' என்று வாசிக்க.

3. 'மற்றும் எப்பெர்ப்பட்டவையிற்றுக்கும் இறுக்கும் கடமை இண வரி சித்தாயமும் மற்றும் எப்பெர்ப்பட்ட வரிகளும்' எனத் திருத்தி வாசிக்க.

4. 'இவ் வாழ்வார்க்கு' என்று வாசிக்க.

expenses of daily worship and repairs to the temple of god (Raṅganātha) Paḻḻikoṇḍaperumāḷ of Tiruppāṟkaḍal Chittiramēḻi-viṇṇagar in Nellūr *alias* Vikramasimhapuram in Paḍai-nāḍu, a sub-division of Chēdikula-māṇikka-vaḷanāḍu by **Madurantaka Pottappich cholan** S'rīraṅganātha *alias* Raja Gaṇḍagōpāladēva.

This has been published as Nl. 62 in Part II of the **Nellore District Inscriptions** and as No. 493 in the **South Indian Inscriptions (Texts)**, Vol. V.

ஸ்வஸ்தி ஸ்ரீ [||*] சகரை யாண்டு(ம) ௧௲௨௱௨ம(ா)க செல்லாம் நன்ற[1] திருபுவன சக்கிறவற்த்திகள் ஸ்ரீ ரங்கனாயகருக்கு றெஜ கண்டன் கோபால தேவன்ற்கு[2] யாண்டு ௯-வது ம(ா)கரநாயவற புஜொத்து பத்தி விருஷத்து[3] துதியையும் திங்கள் கிழமையும் பெற்ற யனுஷத்த நாள் செயங்கொண்ட சொழ மண்டலத்துச் சிறத மாணிக்க வள(ா)நாட்டுப்[4] படை னாட்டு நெல்லூர[ான] (வீர) விக்கிறம சிங்க புரத்து திருப்பாறக் கடல் (ச்)[சி]த்திர முழு விண்ணகாரணப் பள்ளி கொண்ட ரெங்கனாயக(ர்)ருக்கு[5] அமுது படி சாத்துபடி உளப்பட உபயங்களுக்கு நடக்கப்பட்டது......[6] மதுராந்தகப் பொத்தப்பச் சொ(ம)[ழ]ன் ஸ்ரீ ரங்கனாயகான றெஜகண்ட கொபாலதெவர்க்கு [நந்தா] பணத்து தாங்கல்க் கொண்டை நான்கெல்லைக்குள்ப்பட்ட நஞ்சையும் புஞ்சையும் ஊரடங்களுந் திருவிடையாட்டமாக சந்திராதித்த வரைக்கும் செல்ல வுத[த] வருஷமாகக்[7] குடுத்தொம். இயூ-ம் வி[லக்*]கினார் கெங்கைக் கரையில் கா(ா)ராம் பசுவைக் கொன்ற பாவத்தில் பொகக் கடவன். ௨

---

1. 'செல்லாநின்ற' என வாசிக்க.

2. 'ஸ்ரீ ரங்கநாதரான இராஜ கண்ட கொபால தெவர்க்கு' என்று திருத்தி வாசிக்க.

3. 'வ௨௰-ம பக்ஷத்து' என்று வாசிக்க.

4. 'செதிகுல மாணிக்க வளநாட்டு' என்று இருத்தல் வேண்டும்.

5. 'சித்திர மெழி விண்ணகரான பள்ளிகொண்ட பெருமாளுக்கு' என்று இருத்தல் வேண்டும்.

6. 'உள்ளிட்ட நித்த நிபந்தங்களுக்குந் திருப்பணிக்கும் உடலாக' என்று பூர்த்தி செய்து வாசிக்க.

7. 'உதக வ௨௰-மாக' என வாசிக்க.

சாசனம்—940] [D. 3362-3

[அதே கோவில் கிழக்குச் சுவரில் எழுதியிருப்பது.]

திரிபுவன சக்கரவர்த்திகள் மதுரையும் பாண்டியன் முடித் தலையும் கொண்ட [மூன்றும்] குலோத்துங்க சோழ தேவனுடைய 31-ஆம் ஆண்டுக் கல்வெட்டு. ஜயங்கொண்ட சோழ மண்டலத் துப் புலியூர்க் கோட்டமான குலோத்துங்க சோழ வளநாட்டு நக ரம பூந்தமல்லி வெட்டந்தை நம்பியாண்டி மகன் வெமயாழ்வான் அதே மண்டலத்துச் செதிகுல மாணிக்க வளநாட்டுப் பெடை நாட்டு நெல்லூரான விக்கிரம சிங்க புரத்துத் திருப்பாற் கடல் சித்திர மெழி விண்ணகரான பள்ளி கொண்ட பெருமாள் கோயில் உள் திருச் சுற்றில் அவன் தகப்பன் எழுந்தருளுவித்த ஸ்ரீ வராகப் பெருமானுக்குத் திருவிடையாட்டமாகத் திருப்பாற் கடல் அகரத்தில் இரண்டு பாகம் கொண்டு விட்ட செய்தியைத் தெரிவிப்பது.

நெல்லூர் ஜில்லா சாசனங்கள், II பாகம், 840-41 பக்கங்களில் நெல் லூர் 70 நெ. ஆக வெளியாகியுள்ளது.

தென்னிந்திய சாசனங்கள், V வால்யூம், 491 நெ. ஆகவும் பதிப்பிக் கப்பெற்றுள்ளது.

சாசனம் — 941] [D. 3362-4

[அதே சுவரில் உள்ளது.]

திரிபுவன சக்கரவர்த்திகள் பாண்டியன் முடித்தலையும் மது ரையும் கொண்டருளின [மூன்றும்] குலோத்துங்க சோழ தேவனு டைய 10-ஆம் ஆண்டுக் கல்வெட்டு. ஜெயங்கொண்ட சோழ மண்டலத்துச் செதி குல மாணிக்க வளநாட்டுப் பெடை நாட்டு நெல்லூரான விக்கிரம சிங்க புரத்துப் படை முதலிகளும் மூன்று தெருவில் நகரத்தாரும் திருப்பாற் கடல் பள்ளி கொண்ட பெரு மாளுக்கு ஆயம் வைத்துக் கொடுத்த செய்தியைத் தெரிவிப்பது. சிதிலமாக இருக்கிறது.

நெல்லூர் ஜில்லா சாசனங்கள், II பாகம், 838-39 பக்கங்களில் நெல்லூர் 69 நெ. ஆக வெளியாகியுள்ளது. மக்கென்ஸியின் பிரதியில் அர சன் ஆண்டை—டுமி என்றும் வாசிக்க முடியும்.

தென்னிந்திய சாசனங்கள், V வால்யூம், 492 நெ. பார்க்க.

சாசனம்—942] [D. 3362-5

[அதே கோவில் மேல்புறச் சுவரில் காண்பது.]

சகரையாண்டு [க௲உ௱உ௰௪ பிலவ] ஸம்வத்ஸரம் கொண்ட திரிபுவன சக்கரவர்த்திகள் ஸ்ரீ இராச கண்ட கோபால தேவனு

டைய 12-ஆம் ஆண்டு மகர ஞாயிறு பூர்வ பக்ஷ ம் தசமி திங்கட் கிழமை பெற்ற உரோசணி நாள் கல்வெட்டு. செயங்கொண்ட சொழ மண்டலத்துச் செதிகுல மாணிக்க வளநாட்டுப் படை நாட்டு நெல்லூரான விக்கிரம சிங்க புரத்துத் திருப்பாற் கடல் சித்திர மெழி விண்ணகரான பள்ளிகொண்ட பெருமாளுக்கு நித்த நிமந்தங்களுக்கும் திருப்பணிக்கும் உடலாகப் படைநாட் டுத் தாண்டிப்பூறு என்னும் கிராமத்தை மதுராந்தகப் பொத்தப் பிச் சொழன் ரங்கநாதன் ஆன இராச கண்ட கொபால தெவன் விட்ட செய்தியைத் தெரிவிப்பது.

நெல்லூர் ஜில்லா சாசனங்கள், II பாகம், 829-30 பக்கங்களில் நெல் லூர் 60 நெ. ஆக வெளியாகியுள்ளது.

சாசனம்—943] [D. 3362-6

[அதே கோவிலின் வடபுறம் சுவரில் காண்பது.]

அடுத்து வரும் சாசனத்தைப் போலவே இதுவும் அக் கோயி லுக்கு அளிக்கப்பட்ட நிலங்கள் எந்த எந்தக் கிராமங்களில் எவ் வளவு எவ்வளவு இருக்கின்றன என்பது பற்றிய விவரங்களைத் தெரிவிப்பதாகத் தோன்றுகிறது. மிகவும் பிழைபடப் பிரதி செய்யப்பட்டிருக்கிறது.

தென்னிந்திய சாசனங்கள், V வால்யூம், 503 நெ. ஆக வெளியாகி யுள்ளது. நெல்லூர் ஜில்லா சாசனங்கள், II பாகம், 828-ஆம் பக்கத்தில் நெல்லூர் 53 நெ. ஆகக் குறிக்கப்பட்டிருக்கிறது.

சாசனம் — 944] [D. 3362-7

[அதே கோவிலின் வடபுறச் சுவரில் எழுதியிருப்பது.]

சிறுகட்டை நாட்டு மன்று பொழில் முதலிய இடங்களில் எவ்வளவு நிலம் கோயிலுக்கு அளிக்கப்பட்டிருக்கிறதென்னும் செய்தியைத் தெரிவிப்பது.

தென்னிந்திய சாசனங்கள், V வால்யூம், 502 நெ. ஆக வெளியிடப் பெற்றிருக்கிறது. நெல்லூர் ஜில்லா சாசனங்கள், II பாகம், 826-ஆம் பக்கத்தில் நெல்லூர் 56 நெ. ஆக வெளியிடப்பெற்றுள்ளது.

# திருவாங்கூர்—கொச்சி ராஜ்யம்
# TRAVANCORE—COCHIN STATE

*இதற்கு முன் திருவாங்கூர் ஸம்ஸ்தானம் என்று வழங்கிய பிரதேசத்தில் செங்கோட்டைத் தாலூகாவில், முக்கியமாகச் செங்கோட்டையிலும் அதைச்சுற்றியுள்ள கிராமங்களிலும், கிடைத்த சாசனங்களே இவை. சாசனங்களில் வரும் ஸம்ஸ்கிருதப் பகுதியைக் கிரந்தம் மலையாளம் ஆகிய இரண்டும் கலந்தும் எண்கள் போன்ற இதர குறியீடுகளைக் கல்லில் கண்ட விதமே உருவங்களைப் பெயர்த்தும் மூலப் பிரதியிலே எழுதியிருக்கிறது.*

## களாங்காடு — Kaḷāṅgāḍu

*இவ்வூரின் பெயர் கிளங்காடு என்று மக்கென்ஸியின் பிரதியில் காணப்படுகிறது. இது, 'செங்கோட்டைக் கரை வாசலுக்குச் சேர்ந்த கிளங்காடு மணியத்தில் டி ஊர்' என்று அதிலே எழுதியிருப்பதிலிருந்து விளங்கும்.*

*ஊரிலே ஜமதக்கிநேசுவரர் என்ற சிவன் கோவிலும் திருவேங்கடநாதர் அல்லது வேங்கடாசலபதி என்ற பெருமாள் கோவிலும் உள்ளன.*

சாசனம் — **945]** *[D. 3740*

*திருவேங்கடநாதப் பெருமாள் கோவிலில் உள்ள செப்புப் பட்டையம்.*

*இந்தச் சாசனம் அதே கோவிலின் சுவரிலும் பொறிக்கப்பட்டுக் காண்கிறது. 'செப்பேடு மூன்றும் பிரதியே யாகும்' என்று கூறப்படுவது இதிலிருந்து நன்கு விளங்கும். சாசனங்களுக்காக ஓலையில் எழுதப்பட்டு வரும் உத்தரவே பிடிபாடு ஆக அமைந்த முதல் பிரதி. பின்னரே அது கல்லிலும் செம்பிலும் வெட்டப்பெற்று வந்தது. கல்லில் வெட்டியது இரண்டாம் பிரதி; செப்பேடு மூன்றும் பிரதி.*

*கல்லில் பொறிக்கப்பட்டிருக்கும் பிரதி திருவாங்கூர் ஆர்க்கியலாஜிகல் சீரிஸ், I வால்யூம், 277-78 பக்கங்களில் 'U' அடையாளமிட்டு வெளியிடப்பட்டுள்ளது. அதிலே சகாப்தம் [௲சாசுஞ]உ எனவும் வைகாசி ௴ ௰௫௨ எனவும் காணப்படுகிறது.*

*[அடுத்த சாசனத்தைப் பார்க்க.]*

Copper-plate grant in the possession of the temple of Vishṇu known as Tiruvēṅkaḍanāthapperumāḷ or Vēṅkaṭachalapati in the village. Record dated in S'aka 1493, Prajōtpatti, Uttarāyaṇa,

Vasanta ritu, Vaikāsi 5, S'u. daśami, Friday, Uttara corresponding to the 8th year of the reign of the Later Pāṇḍya king Perumāḷ **Alagan Perumal Ativiraraman** *alias* **Sri Vallabhadeva,** son of Perumāḷ Tirunelvēlipperumāḷ Vīraveṇbāmālaiyāṉ Dharmapperumāḷ Kulaśē-kharadēva registering the tax-free *sarvamānya* gift of some land as tiruviḍaiyāṭṭam to god Tiruvēnkaḍanātha of Kiḷāṅgaṭṭūr.

There is a similar record on the south wall of the central shrine in the temple, [vide the next record] and this has been published as 'U' in pp- 277-78 of the **Travancore Archaeological Series,** Vol. I. Therein the Śaka year is given as [149]2 and the date as 15.

The date is given as 'Vaikāśi 7' in the copy of the same inscription on stone published below. Then the equivalent English date would be A. D. 1571, May 4.

ஸ்வஸ்தி ஸ்ரீ [||*] ஶகாப்தம் ௲சாகூ௰௩-ன் மெல் செல்லா நின்ற
ஸ்வஸ்தி ஸ்ரீ ஸாவபௌம வீர அச்யுதாய ப்ரஹவ ஶ்யாமராஜமெந்த்ர
ஜயஸ்தம்ப மைடவாரவரா யீஶ்வர கெஷ்சாஸார நாரஸிம்ஹ கொரவ
ஶைலசிவாகர தொஜ விஶ்வாவஸு(ஸு)ாநு ஶாஹித்யஸாவஹெள ஶ
தெவ ஸ்ராஷணஹ்ரஸ்வநாஅயச நொஜபிமு வஜசரான அரஹாவந
அசுரவத்தி கொனாமைக் கொண்டான் [1] ஸ்ரீ [பெருமாள்] [2] திரு
நெல்வெலி [பெருமா]ள் வீரா வெண்ம்பாமாலையான் தற்ம பெரு
மாள் கொழுபெவரதெவர் னந்தர[ா*]ய ஸ்ரீ பெருமாள் அளகம்
பெருமாள் அதிவீரராமநாய ஸ்ரீ வல்லஹ தெவருக்கு ஆண்டு எட்டா
வது ப்ரஜொத்பத்தி நாம ஸம்வத்ஸரத்து உத்தராயணத்து வஸந்
த ருதுவில் வையாசி மீ ரு உ-யும் [3] ஶுக்ல பக்ஷத்து தஶமியும்
ஶுக்ரவாரம் ஶோபனயோக சுபகரணமும் பெத்த உத்திர நக்ஷத்தி
ரத்து [நாள்*] ஸ்ரீ வாநரவஶ்ஸ நக்ஷத்ரத்து ளள் ஜாதனாய ஸ்ரீ
பெருமாள் அழகன் பெருமாள் அதிவீரராமநாய ஸ்ரீ வல்லஹ தெவ
ந[ா*]ய நாம [4] கிளங்காட்டூரில் நயினார் திருவெங்கடநாதருக்கு

---

1. 'கொனெரின்மை கொண்டான்' என்று வாசிக்க.

2. இந்தச் சாசனத்திலும் இதை யடுத்து வரும் மற்றைச் சாசனங்களிலும் 'பெருமாள்' என்பது எட்டிலே 'ளேள்' என்பது போன்ற ஒரு குறியீட்டால் எழுதப்பட்டிருக்கிறது.

3. இதே சாசனத்துக்குக் கல்லில் உள்ள பிரதியில் தேதி 'எ' என்று காணப்படுகிறது. [அடுத்த சாசனம் பார்க்க.]

4. 'நாம்' என்று வாசிக்க.

திருவிடையாட்டம் ஸவ-ஶோ௱ஸ்ஜோக (வ)[விட்ட] ன[ம்*] வாசல்க் கணக்கர் யிட்(டு)[ட] கைத்தடிப்படி: வடவாரி நாட்டு பண் பொளி உள்ளிட்ட பத்தில் பண்டு[ணை*]டயானையும் பழம்பெண ணாயும்[1] தவிர்த்து நம் கண்டு உழவு தொரந்து [2]திருவிடையாட்டம் விட்டதற்க்கு எல்கையாவது : ஞளிட்டு வென்றான் கடமாக்கொ ளம் உள்பட்டதற்க்கு எல்கை[3] எலத்தூர்க் காலுக்கும் மெல்படி கொளத்து நீர் கல்லுக்கும் மெற்கு தென்னெல்கை பழஞ்சைக் கால்ப் புரவுக்கு வடக்கு மெல் எல்கை கீள்மலாத்துப் பொவு கெழக்கு வட எல்கை ஆத்துக்கு தெற்கும் கன்னம் தொப்புக்கு மெற்குமாக இன்னாங்கு எல்கைக்கி உள்ப்பட்டதற்கு உள்க் கெடையாய் உள்ள கண்டன் மாஷ்ர தெவதாயமு கொண்டு ஶாவும்[4] பண்பொளி மகா தெவர் தெவதாயம் தெர்க்கு [க*]டைமாக் கொளம் நீங்கலாம் பிரத்துண்டான நஞ்சை புஞ்சையளும் தொப் புள்ளதும் நத்தம் செய்தலைத் தொடரும்[5] வ்ருக்ஷ க்ஷவ நி[யி] ஜ[லு:]பாஷாணாக்ஷிணஸ்ய்மாமி ஸிஷஸோஷ்ய மென்னப்பட்ட அஷ் ஹொம தெஜஸ்வாஜ்ய்ங்களுக்கும் நாங்கொள்ளும் கொமுவரயாய் யெர் த்தப்பட்டதுமாம் வரி உள்ள தாநாதி விநிமய விக்ரயங்களுக்கும் யொக்கியமாக செம்பிலும் சிலையிலும் வெட்டி யிவ்வாலய முள்ள படிம [ஸவ-ஶ]ோ௱ஸ்ஜோஷ கய்யாண்டு கொள்ளவும். இவை பார் கொமெழு[ர் உடை]டையான் எழுத்து.

தாநபாலநயொஜ-ஶெஷ்
தாநாச்ச்ரெயொநுபாலநம் |
தாநாத்ஸ்வமவாப்நொதி
பாலநாதச்யுதம் பதம் ||
ஸுஃம்[|*] மஹா ஶ்ரீ[||*]

சாசனம் — 946] [D. 3741

அதே கோவிலில் விமானத்தின் தென்பக்கத்தில் இருந்த சிலாசாசனம்.

ஏற்கெனவே நாம் குறிப்பிட்டபடி மேலே உள்ள செப்பேட்டுச் சாசனத் துக்குக் கல்லில் வெட்டிய பிரதி இது. அதனோடு இதை ஒப்பிட்டுப் பார்க்க.

1. 'பழம் பெரையும்' என்று வாசிக்க.
2. 'திறந்து' என வாசிக்க.
3. 'எல்கை கீள் எல்கை எலத்தூர்' என்று சேர்த்து வாசிக்க.
4. 'இரண்டு மாவும்' என்று இருத்தல் வேண்டும்.
5. 'திடரும்' என வாசிக்க.

As stated already, the present record is a copy on stone, engraved on the south wall of the central shrine of the temple, of the previous inscription, a copper-plate grant.

ஸ்வஸ்தி ஸ்ரீ [||*] ஶகாப்தம் ௲௪௱௬௰௩-ன் மெல் செல்லா நின்ற ஸ்வஸ்தி ஸ்ரீ ஸர்வதேசவீர அஸ்வகாஷ ப்ரஸவ உதயமா உதேந்த்ர ஜயந்த உம்மத்தவாரவாரணஸ்வா க்ஷேத்ரஸார நரஸிம்ஹ கௌரவ தபோதிவாகர சௌரவ விஸ்வாவஸு(ஸு)சந்த்ர பாஸ்கர ஸாவர்ண கதே[வ*] பூ[ா*]ஷண ஸ்ரீவநாதாயந ஜெயமா ஜபுர வஜ்ரான த்ரிஸர்வஜ அக்ரவர்த்தி கொநாமைக் கொண்டான் ஸ்ரீ [பெருமா]ள் திருநெல்வெலி பெருமாள் வீர வெண்பாமாலை யான தர்ம்பெருமாள் கெ[ா*]ளஸெவரதெவர் னந்தர[ா*]ய ஸ்ரீ பெருமாள் அள[க*]ம் பெருமாள் <u>சதிவீரராமநாய ஸ்ரீ வல்லபதெவ</u>ருக்கு ஆண்டு எட்டாது ப்ரஜோத்பத்தி நாம ஸம்வத்ஸரத்து உத்தராயணத்து வஸந்த ருதுவில் வையாசி மீ ௭ உ-யும் பூர்வ பக்ஷத்து ஸப்தமியும் ஸுக்ரவாரமும் ஸுபயோகமும் சுபகரணமும் பெத்த உத்திர நக்ஷத்ரத்து [நாள்*] ஸ்ரீ வர்த்தமான நக்ஷத்ரத்து நாள் ஜாதரான ஸ்ரீ பெருமாள் அளகன் பெருமாள் அதிவீரராமரான ஸ்ரீ வல்லபதெவந[ா*]ய நாம் கிளாங்காட்டூரில் நயினார் திருவெங்கடமுடையார்க்கு திருவிடையாட்டம் ஸர்வமாந்யமாக வட்ட ௩௦ வாசல்க் கணக்கர்யிட்டு கைத்தடிப்படி: வடவாரினுட்டு பண்பொளி உள்ளிட்ட பத்தில் பண்டு[ை*]ட யானையும் பழம்பெ(ணண)ரையும் தவிர்த்து நம் கண்டு உழவு தெரந்து திருவிடையாட்டம் விட்டதற்க்கு எல்கையாவது: நாளிட்டு வென்றான்க் கடமாக் கொளம் வுள்ப்பட்டதற்க்கு எல்கை எலத்தூர்க் காலுக்கும் ஷி கொளத்து நீர்க் கல்லுக்கும் மெற்கு தென்னெல்கை பழஞ்சைக் கால்ப் புறவுக்கு வடக்கு[1] மெல் எல்கை கிள் மலாத்து பெரவு கிழக்கு வட எல்கை ஆக்துக்குத் தெர்க்கும் கன்னந்தொப்புக்கு மெற்க்கும் ஆக இன்னாங்கு எல்கைக்கு உள்ப்பட்டதற்கு உள்க் கெடையாய் உள்ள கண்டன் பார்ஸ்வ தெவதாயம் மாவும் பண்ம்பொளி மஹாதெவர் தெவதாயம் தெர்க்குக் கடமாக்கொளம் நீங்கலாம் பிரவத கண்டான் நஞ்சை புஞ்சையுளும் தொப்புள்ளதும் நத்தம் செய்தலைத் தெடரும் வ்ருக்ஷ காஷ்ட நிதி ஜல பாஷாண[ா*] அக்ஷிணீ[ா*] ஆகாமி ஸித்த ஸாத்யம் என்னப்பட்ட அஷ்டபோக தேஜ

1. திருவாங்கூர் வெளியீட்டில் இதுவரையில் தான் காணப்படுகிறது, மேலே உள்ள பகுதி சிதிலமாகி விட்டதாகக் குறிக்கப்பட்டுள்ளது.

ஷோடசோபசாரங்களுக்கு நாங் கொள்ளும் கொமுவறயாய் யெர்த்தப்பட் டதுமாழ வரி உள்ள தாநாதி விநிமய விக்ரயங்களுக்கு யொக்யமாக செம்பிலும் சிலையிலும் வெட்டி யிவ்வாலய முள்ளபடி [ஸவ-ஜ] காலமாக கையாண்டு கொள்ளவும். இவை பார்கொமெஹூர் உடையான் எழுத்து.

> தாநபாலநயொர்மத்யெ தாநாச்ச்ரெயொநுபாலநம் |
> தாநாத்ஸ்வர்க்கமவாப்நோதி பாலநாதச்யுதம் பதம் [||*]
> [illegible] [|*] [illegible] [||*]

சாசனம் — **947**] *[D. 3742-க*

*அதே ஊரில் ஜமதக்கிநேசுவரர் கோவிலுக்கு வெளியில் கிழக்குப் பக்கத்தில் குத்துக்கல் நட்டிருப்பதில் எழுதியிருந்த சிலாசாசனம்.*

இது திருவாங்கூர் ஆர்க்கியலாஜிகல் சீரிஸ், VII வால்யூம், 33-ஆக வெளியாகியுள்ளது. அதிலே சாசனம் பூர்த்தியாக இல்லை. மக்கென்ஸியின் பிரதியில் முழுமையும் காணப்படுகிறது.

On a stone set up in front of the Jamadagnīs'vara temple. Record dated in S'aka 1665, Kollam 919, registering the gift by the Travancore king **Balamarttandavarman** and **Śiṅnanañjādēvar**, a polegar chief, of the gardens bestowed on the temple by several individuals, for conducting the early morning worship (*śirukālai sandi*) of the god and for the expenses of certein temple festivals.

This has been published as No. 33 in the **Travancore Archaeological Series**, Vol. VII. where the concluding portion of the text is not available. Therein the month and date, Tai 21, are also given in addition to the year.

சாலீவாகன சகாப்தம் ௲௬௱௬௰௫-ன் மெல் செல்லா னின்ற கொல்லம் ௯௱௰௯ வது[1] சுவாமி சமதக்கினி யீசுவரர் திருவிளையாட்டம் சிறுகா[லை*]ல சந்திக் கட்டளைக்கு திருவிளாப் பிறத்துக்கு மாக விட்டது. சங்கு செருவைகாரன் உபயம்[2] லாங்கைத் திருத்து ரூ- சா?-ம் நந்தவனப் பிறம் ரூ- கவ-ம் இராசா வய்யனவர்கள் விட்டுக் கொடுத்தது[ம்*] தெ தொப்பு அஞ்சு இலுப்பை மரந் தொப்பும் பனந் தொப்பும் சங்கர நாறுயண பிள்ளை சக்கரை

---

1. திருவாங்கூர்ச் சாசன இலாகா வெளியீட்டில் 'தை மாதம் உ௰க' என்பதும் கொடுக்கப்பட்டுள்ளது.

2. அதிலே 'உடைப்பும்' என்று காணப்படுகிறது.

யப் பிள்ளை [1] [நற்*]த்தாலம் பிள்ளை கண்ணுயிர முதலியார் அம்பலவாண முதலியார் ஆறுமுகத் தெவரிவர்கள் தருதாயி [2] மிதிலுள்ளார்க்கு [நிதி*] நிக்ஷெப சல தரு பாஷாணங்களும் திரு விளாவாய் சுவாமிக்கென்று ஸ்ரீ வால மார்த்தாண்ட வற்மகுல ருஜா அவர்களும் [3] சின்னைஞ் ச[ர*]த்தெவர் அவர்களுமாக தலத்தார் குலசெகரப்பட்டர் கையில் தான [4]மும் செய்து ராசகரத்தில் எளப்பிச்சு செய்ய தற்ம பத்தாவாக்கி சங்கரலிங்க முதலியாரை கட்டளையிட்டபடியினுலெ யிந்த தருமத்துக்கு யாதாமொருத்தர் விக்கினஞ் செய்தாலும் முதலை அபெக்ஷித்தாலும் சிலவழித்தாலும் கெங்கைக் கரையில் காராம்பசுவைக் கொன்ற தொஷத்தில் பொவாருகவும். உ

சாசனம் — **948**] [D. 3742-எ

*அதே கோவிலுக்கு வடக்குப் பக்கத்தில் குத்துக்கல்லிலே இருந்த சிலா சாசனம்.*

கொல்லம் 961, விசுவாவசுஹு அற்பசிமீ ൧கൗ சொமவாரம் புனர்பூசநாள் கொண்ட கல்வெட்டு. கிளாங்காடு சுவாமி சமதக் கிசுவரருடைய உச்ச சந்திக் கட்டளைக்குப் பெரிய முதலியார் என்னும் தளவாய் தீத்தாரப்ப முதலியார் சரசுவதி குளத்தின் கீழ் நிலம் விட்ட செய்தியைத் தெரிவிப்பது.

திருவாங்கூர் ஆர்க்கியலாஜிகல் சீரிஸ், VII வால்யூம், 34 செ. ஆக வெளியாகியிருக்கிறது.

சாசனம் — **949**] [D. 3742-அ

*கோவில் உள் விமானத்தில் தென்பக்கத்திலிருந்த சிலாசாசனம்.*

பாண்டிய மன்னன் கொ ஜடிலவர்மரான திருபுவன சக்கரவர்த்திகள் பெருமாள் குலசேகர தேவருடைய ஆட்சியின் பதினைந்தாம் ஆண்டும் சகாப்தம் 1416, மீன ஞாயிறு 10௨ பூர்வபக்ஷத்துத் தசமி

---

1 இதைத் '[தீத்தாரப்ப]பிள்ளை' என்று வாசித்திருக்கிருர்கள்.

2 இந்தப் பகுதி '[அன்னவா]ண முதலியார் ஆறுமுக[த் தம்பிரான்] வரிக்கத் தொப்பு' என்று வாசிக்கப்பட்டுள்ளது.

3 'திருவுளாவரியும் காக்கென்று ஸ்ரீபால மார்த்தாண்டவற்ம தம்பிராரவர்களும்' எனக் காணப்படுகிறது.

4 திருவாங்கூர்ச் சாசன வெளியீட்டில் இது வரையில்தான் உள்ளது.

சுக்கிரவாரம் பெற்ற பூசத்து நாள் கல்வெட்டு. வடவாரி நாட்டுக் கிளாங்காட்டூர் உடையார் திருவக்கினீசுவரமுடைய நாயனார் கொயில், பிள்ளையார் கொயில் ஆகிய இரண்டையும் காசியப கொத்திரத்துப் பொதாயன சூத்திரத்து இளைய நயினான் தண்டை தந்த சுவாமி பட்டனுக்குக் காணியாட்சியாகக் கொடுத்து அதற்காக நிலமும் 550 பணமும் அளிக்கப்பெற்ற செய்தியைத் தெரிவிப்பது.

திருவாங்கூர் ஆர்க்கியலாஜிகல் சீரிஸ், I வால்யூம், 265-66 பக்கங்களில் 'J' குறியிட்டு வெளியாகியுள்ளது. அதிலே சுவாமியின் பெயர் திருவக்கீசுவரமுடைய நாயனார் என்று காணப்படுகிறது

**சாசனம் — 950** [D. 3742-க

ஷை கோவிலுக்கு வடக்குப் பக்கத்திலிருந்த சிலாசாசனம்.

இது திருவாங்கூர் ஆர்க்கியலாஜிகல் சீரிஸ், I வால்யூம், 267–68–ஆம் பக்கங்களில் L அடையாளமிட்ட சாசனமாக வெளியாகி யுள்ளது.

On the north wall of central shrine in the Jamadagnīśvara temple.

Record dated in Śaka 1470, Kīlaka, Māsi 27, Śu. ēkādaśi, Friday, Uttara, corresponding to the 6th year of the reign of the Later Pāṇḍyan king Jaṭilavarman *alias* Tribhuvana chakravartin Perumāḷ **Parakrama Pandyadeva, son of Abhirāma Parākrama Pāṇḍyadēva, registering a gift of land by Kulaśēkharavarman, son of Perumāḷ Tirunelvēli perumāḷ to meet the expenses of the daily and special worship of god Tiruvagnīśvaram-uḍaiya-Nāyanār at Kiḷaṅgaṭṭūr in Vaḍavāri-nāḍu.**

**This inscription has been published as item 'L' in pp 267-68 of the Travancore Archaeological Series, Vol. I. There the text is incomplete. Further the *nakshatra* is given at Uttarāḍam and the name of the donor prince as Abhirāmavarman (instead of Kulaśē-kharavarman found in the Mackenzie text).**

**The corresponding English date would be A.D. 1549, February 22, with the *nakshatra*** Uttarāshaḍa.

ஶுபமஸ்து[।*]சகாப்தம் ௲சஎய-ல் ஸ்வஸ்திஸ்ரீ[॥*]கொ ஜடில வர்மரான ஸ்ரீ[திரி*]புவன சக்கரவர்த்திக்கு கொனெர்மை கொண் டமண் வாழுனது வீரபராக்கிரம பாண்டிய தெனைராஜனறகு ஸ்ரீ

வீரகேரள பாண்டிய தெவருக்கு[1] இயாண்டு ஆராவது கீலகஞ்ஸ மாசிமீ உ[ம*]எஉ தசமியும் பூர்வ பக்ஷத்து ஏகாதசியும் சுக்கிர வாறமும் ஆயுஷ்யமான ஞம யொகமும் பவகரணமும் பெற்ற உத்திரத்து[2] நாள் ஸ்ரீ பெருமாள் திருநெல்வெலிப் பெருமாள் நந்தனரான குலசெகர[3] வற்மரு[ன*] ஞம் வடவாரி ,ஞட்டு இளாங்காட்டூர் உடையார் திருவக்கினீசுவரமுடைய நயினருக்கு விளா பூசைக்கு நாளொன்றுக்கு அமுதுபடி முன்னுழியாகவும் கறியமுது உப்பமுது மிளகு அமுது தயிறு அமுது வெள்ளைச் சர்க்கரை பழம் இலையமுது அடைக்காயமுது சாத்துப்படித்திரவி யம் எண்ணைக் காப்பு திரு விளக்கெண்ணை பஞ்சாமிருதத்துக்கு வெண்டின வகையாக இது வகை வைக்க வெண்டும் படிக்கு நாம் தெவதானம் பாட்டமாக விட்ட நிலம் ஊர்த்துப் புறிவு இளாங் காட்டூரில் நாலாங் கண்ணுரு தடி ஆருமா அஞ்சாங் கண்ணுரு தடி அஞ்சு மிது நிலம் அரைக்காணியும் தெற்குப் புறவு நாலாங் கண் ணுறு தடி மூனு நிலம் அரைக்காணியும் கீழ்நிலம் காணி அரைக் காணியும் பரமனெரி னிலம் அரைக்காணியும் அமுது வைப்புக்கு மாவடிக் கண்ணுறு [த]டி ௩ ரூஉ ஜஹறும் பத்தாங் கண்ணுறு நிலம் காணி முந்திரையும் பதினொருங் கண்ணுறு தடி ஒன்று நிலம் அரைக்காணி முந்திரையும் இன்னிலம் ரூஉ இ - யும் தடி ஓண்ணு நிலம் ஆறு மாக்காணியும் தடி ஓண்ணு நிலம் அரைக் காலும் இன்னிலம் இரண்டுமாவும் இன்னாள் முதலுக்கு நாம் கொள்முதலாக விரைப்பாடு எளப்பிவித்தும் நம் வரியில்லாக் கணக்கிலுந் தவிர்த்து தெவதானம் பாட்டமாக கல்லுலும் செம்பிலும் வெட்டிக் கைய்யாண்டுக்கொள்ள வேண்டியது [॥*]

சாசனம் — 951 ] [D. 3742-ம

டை கோவிலுக்குத் தென்பக்கத்தில் மண்டபத்திலிருந்த சிலா சாசனம்.

பாண்டிய மன்னன் கொ மாறபன்மரான திருபுவன சக்கர வர்த்திகள் சொணுடு கொண்டு முடிகொண்ட சொழபுரத்து விஜயாபிஷெகம் பண்ணி அருளிய ஸ்ரீ சுந்தர பாண்டிய தேவ

1. ' திரிபுவன சக்கரவர்த்திகள் கொனெரின்மை கொண்டான் ஸ்ரீ பெருமாள் அபிராம பராக்கிரம பாண்டிய தெவர் நந்தனரான பெருமாள் ஸ்ரீ பராக்கிரம பாண்டிய தெவர்க்கு ' என்று வாசிக்க.

2. திருவாங்கூர் வெளியீட்டில் இது ' உத்திராடத்திஞள் ' என்று காணப்படுகிறது.

3 இந்தப் பெயரை ' அபிராம வர்மர்' என்று வாசித்திருக்கிறார்கள்.

னுடைய ஆட்சியின் 20-ஆம் ஆண்டுக்கு எதிராம் ஆண்டு, கார்த்திகை வியாழக்கிழமை பெற்ற நாள் கல்வெட்டு. வடவாரி நாட்டுக் கிளாங்காட்டூரில் திருவக்கிநீசுவரமுடைய நாயனார் கோயிலில் இரண்டு நந்தாவிளக்கு எரிக்க நந்தா விளக்குப்புறமாகக் கிழைப் பொன்னறையில் ஒரு மா நிலம் அளிக்கப்பெற்ற செய்தியைத் தெரிவிப்பது.

திருவாங்கூர் ஆர்க்கியலாஜிகல் சீரிஸ், VII வால்யூம், 31 (b) நெ. ஆக வெளியிடப் பெற்றுள்ளது.

சாசனம் — 952] [D. 3742-மக

ஷை கோவிலுக்குக் கிழக்குப் பக்கத்திலிருந்த சிலா சாசனம்.

பாண்டிய மன்னன் கோ மாறபன்மரான திருபுவன சக்கரவர்த்திகள் சோணாடு கொண்டு முடிகொண்ட சோழபுரத்து வீராபிஷேகம் பண்ணி அருளிய ஸ்ரீசுந்தர பாண்டிய தேவனுடைய ஆட்சியின் 20-ம் ஆண்டுக்கு எதிராம் ஆண்டுக் கல்வெட்டு. ஆரம்பம் மட்டுமே உள்ளது. வடவாரி நாட்டுக் கிளாங்காட்டூர் உடையார் திருவக்கிநீசுவரமுடைய நாயனார் கோயில் பெயர் காணப்படுகிறது.

திருவாங்கூர் ஆர்க்கியலாஜிகல் சீரிஸ், VII வால்யூம், 31 (a) நெ. ஆக வெளியிடப் பெற்றுள்ளது.

சாசனம்—953] [D. 3742-மஉ

ஷை கோவிலுக்குக் கிழக்குப் பக்கத்திலிருந்த சிலா சாசனம்.

இது திருவாங்கூர் ஆர்க்கியலாஜிகல் சீரீஸ், I வால்யூம், 275–76-ஆம் பக்கங்களில் 'S' குறியிட்ட சாசனமாக வெளியாகியுள்ளது. அங்கே சாசனம் குறையாக நின்று விடுகிறது.

On the east wall of the mahāmaṇḍapa in front of the central shrine in the temple of Jamadagnīśvara svamin. Record dated in S'aka [1479], Vibhava, Aṟpas'i 24, ba. saptami, Friday, Pushya corresponding to the 5th year in the reign of the Later Pāṇḍyan king Jaṭilavarman *alias* Tribhuvana chakravartin Kōnērinmai koṇḍan **Alagan Perumal Ativiraraman** *alias* **Srivallabhadeva**, the son of Tirunelvēlipperumāḷ Vīraveṇbāmalai Kulaśēkhara dēva and grand - son of Abhirāma Parākrama Pāṇḍya dēva registering the appointment of S'ri Kailāyam-uḍaiyāṟ Maṟaittiru Vaṇādaperumāḷ of Kiḍarattūr in Ulagu-chintāmaṇi vaḷanāḍu as the accountant of the temple [of god Tiruvagnīs'vara] at Kiḷaṅgāṭṭūr in

Vaḍavari-nāḍu. The order is issued as if made by the god through the traditional executive Ādi-chaṇḍēśvara.

This has been published as item 'S' in the **Travancore Archaeological Series**, Vol. I. pp. 275-6.

ஸ்வஸ்தி ஸ்ரீ[।*]

பராக்கிர ருஜகுல விருத்தி நாம்
சாத்திர வித்தியாத சாரிணும்
அகல விதல திருவிக்கினீசுவர
சியாமெஷி ஸ்ரீ பிபிசா வனம்[1]

அதி சண்டெசுரு ஸ்ரீ புவனஞெய மாக சக்க றவர்த்திகளில் [ஆ*] [ச]ாளயிக்கூன் மெல் செல்லா னின்ற கொல்லம் புவனெக வீர சகல குண சம்பன்னரான ஆதவராம னந்தன[2] கெரள தமொ திவாகர சௌள சிந்து வடவானல சங்கீத சாயுச்சிய[3] வித்தியா விஞெத விஷததிக ஸ்ரீ[4] கொ சடிலவர்ம்ம ரான (ஸ்ரீ) [திரி]புவன சக்கிரவர்த்தி கொனெர்மை கொண்டான் அபிரும பருக்கிரும பாண்டிய தெவார ன்ந்தரான அளகன் பெரு மாள் திருநெல்வெலிப் பெருமாள் வீர வெண்[பா*]மாலை(ம) [ய]ாய குலசெகர தெவரா னநத(க)[ந]ரான அளகன் பெருமாள் அதிவீரராமப் பெருமாள் ஸ்ரீ வில்லிபுத்தூர் தேவருக்கு[5] ஆண்டு ஸ்ரீ புவன[6] விபவ ஞூ அர்ப்பிசி மீ உ௰ச ௳ அபர பக்ஷத்து சப்தமி யும் சுக்கிர வாரமும் சிங்க கரணமும் பூசத்து நாள் பெற்ற உலகு சிந்தாமணி வளநாட்டு கிடாரத்தாற்ச் சிகையிலாய முடையார்

---

1. இந்தச் சுலோகம் சரியாக விளங்கவில்லை. திருவாங்கூர் வெளியீட்டில் இது பின் வருமாறு தமிழும் கிரந்தமும் கலந்து எழுதப்பட்டுக் காணப்படுகிறது.

பாத்கி௯ஜ சஞ்ஜலி விருத்திநாம்
ச[ா]க்கிறவத்கி௯ [யதூ௯]ாந ஸாரிணாம் [।*]
அஹாசீ திருவக்கினீஸ்வரஸ்ய
ஷ்மெஃ ஸ்ஹூாபி சாஸநம்[॥*]

2. 'ஆதி சண்டெஸ்வராஜ்ஞயம் [॥*] சகாஜூம் கூசாஅயிக்கூல் மெல் செல்லா நின்ற ஸ்வஸ்தி ஸ்ரீ புவனெக வீர சகல குண ஸம்பன்ன ஆகவ ராம னந்த' என்று திருவாங்கூர் வெளியீட்டில் காணப்படுகிறது.

3. 'சாஹித்ய' என்று வாசிக்க.

4. 'ஸ்வஸ்தி ஸ்ரீ' எனத் திருத்துக.

5. 'ஸ்ரீ வல்லப தேவருக்கு' என்று வாசிக்க.

6. 'யாண்டு ௫-வது' என்று காணப்படுகிறது.

மாசதவெணுகப் பெருமாளுக்கு[1] வடவாரி நாட்டு கிளாங்காட்டூர் [நம*]ரலையத்துக்கு தர்மத்துக்காக [கணக்கு][2] காணியாக்ஷியாக கொடுக்கும்படிக்கி [ந*]ம் குமாரன் திருநெ[ல்வெ]லிப் பெருமாள் வீர வெண்பாமாலையவான குலசெகர தெவர் னந்தன [ரான] அளகம் பெருமாள் அதி வீரராம சுவாமித் தெவர்[3] நம் வாச[ல்*] சுரத்தற்கு வொலை வர விடுகையில் நன் குமாரன் அளகன் பெருமாள் ஆதி நாராயணப் பெருமாள் ஸ்ரீ புவன தெவர்களான ஆலயக் காரியம் சீவலத் தெவனும் நம் ஆலயங்களுக்கு [கணக்கு] கெண்டிக்கா தெவி தத வீர ராம பாண்டிய தெவனும் நம்மாலைய முதல் ஆ திரு மெனிமாத தாரய ஜமதக்கினிசுராரியங்களுக்கு தெவதானமுடைய ஜமதக்கினீசுவர சுவாமிக்குத் தன்மபத்தாக கணக்குக் காணியாக்ஷியாக ஆசந்திரார்க்கம் சந்ததிப் பிரவேசம் ஆண்டனுபவித்துக் கொள்வாராகவும் [॥*]

## சாம்பூர் வடகரை — Śāmbūr-Vaḍakarai

***ஊரில் உள்ள திருமூல நாதர் கோவிலுக்கு வடக்குப் பக்கத்தில் விமானத்திலிருந்த சிலாசாசனம்.***

சாசனம் — **954**] [D. 3744-டுசு

சுவாமி திருமூலநாதர் பிரதோஷக் கட்டளைக்குப் பிச்சன் உத்தம கங்கன் புண்ணியமாகவும், அம்மை யடியான் புண்ணியமாகக் குமார[க் கடவுளு]க்கு மாதம் தோறும் கார்த்திகைத் திருநாளுக்கும் விந்தனூர் கொதைச்சன் நிலம் கொண்டு விட்ட செய்தியைக் கூறுவது.

திருவாங்கூர் ஆர்க்கியலாஜிகல் சீரிஸ், V வால்யூம், 65 செ. ஆக வெளியாகியுள்ளது. சாசன எழுத்துக்களின் வடிவைக் கொண்டு இது கி. பி. 1600-க்கு அணித்தான காலத்தைச் சேர்ந்ததாகக் கொள்ளலாம் என்று குறிக்கப்பட்டுள்ளது.

---

1. 'கிடாரத்தார் சீ கைலாயமுடையான் ம[ன*]றத்திரு வாணுதப் பெருமாளுக்கு' என வாசிக்க.
2. இது ஒரு குறியீட்டால் எழுதப்பட்டிருக்கிறது.
3. 'சீ வல்லப தெவர்' என்று வாசிக்க.

சாசனம் —955] [D. 3744-ல

ஷை கோவிலுக்குத் தென்பக்கத்திலிருந்த சிலா சாசனம்.

On the south wall of the central shrine in the temple of Tirumūlanatha, other wise known as Mūlasthanēśvara in the village. Record dated in the 2nd + 23rd year, Mīna 7, ba. dvādaśi, Kārttigai in the reign of the Pāṇḍyan king Jaṭilavarman *alias* Tribhuvana chakravartin **Kula[sekhara ?] deva** registering the grant of some land to meet the expenses of special worship on the two ashṭami days every month and of lamps etc. in the temple of god Tirumūlanātha at Vindanūr *alias* Parākrama-pāṇḍyach-chaturvēdimaṅgalam by the prince whose name might be restored as Śrīvallabha Perumāḷ. Tachccha Nenmali Uḍaiyan, the signatory of the record also figures in a record of Śrīvallabha dēva. [Vide No. 962].

ஸ்வஸ்தி ஸ்ரீ [||*] கொ ஜடிலவர்ம த்ரிபுவன சக்ரவர்த்திகள் மூன்று முடிக்கி மூரிய குல தேவருக்கு[1] யாண்டு இரண்டாவதின் எதிர் இருபத்து மூன்றாவது மீன ஞாயற் எழாந் தெதியும் அமற பக்ஷத்து துவாதசியும் உடைய யொகமும் பெற்ற காற்திகை னாள் குருமரை னாட்டு விந்த நல்லூற்றுளகமான பராக்ரம பாண்ட்ய சதுர்வெதிமங்கலத்து[2] உடையாற் திருமூல னாதரானமுடைய நயினார் கொவில் தாசற்க்கு இன்னயினார்க்கு இவர் தந்தயரான மல வல்ல [பெருமா]ளா[ன்*]நாம் திருவானந்த விளக்கு[3] இரண்டுக்கும் ஸந்த்யா தீபத்துக்கு மாத மாதம் ஒன்றுக்கு எண்ணை இருபது இரு நாளிக்கும் சுவாமி பூசைக்கி மாகவு மாத[ம்*] ஒன்றுக்கு அஷ்டமி இரண்டுக்கும் அஷ்டமி னாள் ஒன்றுக்கு அமுதுபடி நானாழிக்கிம் உ குறுணி இருநாளி அமுது திருமாலை திருவிளக்கு வதுக்கு தெவ தானமாக விட்ட இன்னாட்டு உருதியான காலப் புறவு தெற்க்கு தென் எல்லை ஆற்றுக்கு வடக்கு மெல் எல்லை வரம்புக்குங்

---

1. அரசன் பெயர் தெளிவாக இல்லை. குலசெகர தெவர் என்று இருக்கலாம்.

2. 'விந்தனூரான பராக்கிரம பாண்டிய சதுர்வெதி மங்கலத்து' என்று வாசிக்க.

3. 'திருநொந்தா விளக்கு' என்று இருக்கலாம்.

கிழக்கு கீழ் எல்லைக்கு தெற்கு வட எல்லை பெரும்பத்து உடைய தெற்கு இன்னுங்கு எல்லைக்குள்ப்பட்ட நஞ்சை புஞ்சையும் மாவடை மரவடையும் கொடி தொட்டமும் உள்பட்டதும் இன்னுள் முதலுக்கு தெவதானமாக கையாண்டு ஆசந்திரார்க்கம் கல்விலும் செம்பிலும் வெட்டிக் கையாண்டு பூசையும் திருவானந்த விளக்கும் திருமாலேயும் நடத்திப் பொகவும். இவை தச்ச நென்மலி உடையான்[1] யெழுத்து [॥*]

சாசனம்—956] [D. 3744-ஶஅ

ஷை கோவிலுக்கு வடக்குப் பக்கத்தில் விமானத்திலிருந்த சிலா சாசனம்.

பாண்டிய மன்னன் கொ ஜடிலவர்மரான திரிபுவன சக்கரவர்த்திகள் பொன்னின் பெருமாள் பராக்கிரம பாண்டிய தெவரான வீர பாண்டிய தேவர் ஆட்சியின் இரண்டாவதன் எதிர் ஐந்தாம் ஆண்டு கும்ப மீ அபர பக்ஷத்துச் சதுர்த்தசியும் ஞாயிற்றுக் கிழமையும் பெற்ற மன்னன் ஆட்டைப் பிறந்த நாளான அவிட்டத்து நாள் வத்ஸ கொத்திரத்து ஆபஸ்தம்ப சூத்திரத்து வங்கிபுரத்து ஸ்ரீகாரிமார பட்டனுக்குக் குறுமறைநாட்டு விந்தனூரான பராக்கிரம பாண்டிய சதுர்வெதி மங்கலத்துப் பாகம் ஒன்றை உதக பூர்வமாக அளித்த செய்தியைத் தெரிவிப்பது.

திருவாங்கூர் ஆர்க்கியலாஜிகல் சீரிஸ், I வால்யூம், 259–60 ஆம் பக்கங்களில் 'F' அடையாளமிட்ட சாசனமாக வெளியாகி யிருக்கிறது.

சாசனம் — 957] [D. 3744-ஶகூ

ஷை கோவிலுக்கு வடமேற்குப் பக்கத்தில் விமானத்திலிருந்த சிலா சாசனம்.

பாண்டிய மன்னன் கொ ஜடிலவர்மரான திரிபுவன சக்கரவர்த்திகள் பொன்னின் பெருமாள் பராக்கிரம பாண்டிய தேவரான வீர பாண்டிய தேவருடைய ஆட்சியின் இரண்டாவதன் எதிர் ஐந்தாம் ஆண்டு துலா மீ 14உ பூர்வபக்ஷத்துத் துவிதியையும் வியாழக் கிழமையும் பெற்ற அனுஷத்து நாள் கல்வெட்டு. குறுமறை

1. இதில் கையெழுத்திட்டுள்ள தச்ச நென்மலி யுடையான் ஸ்ரீ வல்லப தெவனுடைய ஆட்சிக் காலத்துச் சாசனம் ஒன்றிலும் அதிகாரியாகக் கையெழுத்திட்டுள்ளான். பின்னுல் 962 நெ. சாசனம் பார்க்க.

நாட்டு விந்தனூரான பராக்கிரம பாண்டிய சதுர்வெதி மங்கலத்துப் பாகம் இரண்டை இரு பிராமணர்களுக்குத் தானம் அளித்த செய்தியைத் தெரிவிப்பது.

திருவாங்கூர் ஆர்க்கியலாஜிகல் சீரிஸ், I வால்யூம், 257–58 ஆம் பக்கங்களில் 'E' குறியிட்ட சாசனமாக வெளியாகி யிருக்கிறது.

சேங்கோட்டை — Śeṅkōṭṭai

செங்கோட்டைக் கரை வாசலுக்குச் சேர்ந்த கஸபா செங்கோட்டையில் அழகிய மணவாளப் பெருமாள் கோவிலிலே விமானத்தில் மேற்குப் பக்கத்திலிருந்த சிலாசாசனம்.

சாசனம் — **958**] [D. 3737

பாண்டிய மன்னன் கொ ஜடிலவர்மரான திரிபுவன சக்கரவர்த்திகள் ஸ்ரீ அழகன் பெருமாள் ஸ்ரீ வல்லப தேவருடைய ஆட்சியின் இரண்டாவதன் எதிராமாண்டு பங்குனி மீ 7உ அபர பக்ஷத்துப் பஞ்சமியும் [சுக்கிர வாரமும்] பெற்ற அனுஷத்து நாள் கல்வெட்டு. தென் ஆரி நாட்டு நல்லூர்ப் பற்றுக் கீழ்பிடாகை செங்கொட்டை நாயனார் குலசெகர விண்ணகரப் பெருமாள் கொயில் ஜீர்ணொத்தாரணமாகத் தங்கச்சி வென்று மாலையிட்ட பெருமாள் திருப்பணி செய்து நாயனாரையும் நாச்சியாரையும் எழுந்தருளுவித்து ஸ்ரீவல்லபன் சந்தி பூசைக்கும் மற்றும் வெண்டும் நிவந்தங்களுக்குமாக வட ஆரி நாட்டுப் பைம்பொழில் பற்று மெல் பிடாகையில் கரடிப் பாறை ஆன பராக்கிரம பாண்டிய நல்லூர் சூடிக் கொடுத்தாள் ஏரி அரசன் குளம் உள்ளிட்ட பற்று நிலம் அளித்த செய்தியைத் தெரிவிப்பது.

திருவாங்கூர் ஆர்க்கியலாஜிகல் சீரிஸ், VII வால்யூம், 37 செ. ஆக வெளியாகியுள்ளது.

சாசனம் — **959**] [D. 3738

அழகன் பெருமாள் கோவில் விமானத்தில் [கர்ப்ப கிருகத்தின் முன்னுள்ள மண்டபத்தின்] வடபுறம் சுவரில் எழுதியிருப்பது.

புவநெக வீரன் சந்திர குல பிரதீப கொ ஜடிலவர்மரான திரிபுவன சக்கர வர்த்தி கொனெரின்மை கொண்டான் ஸ்ரீ அழகன் பெருமாள் அபிராம பராக்கிரம பாண்டிய தெவர் நந்தனரான குலசேகர தேவரான பராக்கிரம பாண்டிய தேவர் ஆட்சியின் மூன்று

வது ஆண்டுக்குச் சரியான சகாப்தம் 1467, விசுவாவசு ஹூ...... அபரபக்ஷத்து ஏகாதசி [சுக்கிரவாரம்] பெற்ற உத்திரத்து நாள் கல்வெட்டு. தென்னாரி நாட்டு......நாயக சதுர்வேதி மங்கலத்து நாயனார் குலசேகர விண்ணகர எம்பெருமானுக்குத் திருவிடையாட்டமாக நிலம் அளிக்கப்பட்ட செய்தியைத் தெரிவிப்பது. பூர்த்தியாக இல்லை.

திருவாங்கூர் ஆர்க்கியலாஜிகல் சீரிஸ், I வால்யூம், 266–67 ஆம் பக்கங்களில் 'K' குறியிட்ட சாசனமாக வெளியாகியுள்ளது.

சாசனம் — **960**] [D. 3739

குலசேகர நாதர் கோவில் விமானத்தில் தென்பக்கத்திலிருந்த சிலா சாசனம்.

புவனைகவீர சந்திர குலப் பிரதீப கோ ஜடிலவர்மரான திரிபுவன சக்கரவர்த்தி கோனேரின்மை கொண்டான் ஸ்ரீ பெருமாள் அபிராம பராக்கிரம பாண்டிய தேவர் நந்தரான ஸ்ரீ பெருமாள் குல சேகர தேவரான பராக்கிரம பாண்டிய தேவனுடைய ஆட்சியின் மூன்றாம் ஆண்டும் சகாப்தம் 1467 ஆண்டும் கொண்ட விசுவாவசு ஹூ அற்பசி மீ 30 உ அபரபக்ஷத்து ஏகாதசி, சுக்கிர வாரம் பெற்ற உத்திரத்து நாள் கல்வெட்டு. தென்னாரி நாட்டுச் செங்கோட்டையில் உடையார் குலசேகரமுடைய நாயனார்க்குத் தேவதானம் பாட்டமாக அரசன் நிலம் அளித்த செய்தியைத் தெரிவிப்பது.

திருவாங்கூர் ஆர்க்கியலாஜிகல் சீரிஸ், I வால்யூம், 103–104 ஆம் பக்கங்களில், VI சாசனமாக வெளியாகியிருக்கிறது. அதன் கடைசிவரியில்புள்ளியிட்டு காட்டப் பெற்ற இடத்திலே, மக்கென்ஸியின் பிரதியில் 'ஒக்கூருடையான் எழுத்து. உ' என்பது காணப்படுகிறது.

மார்த்தாண்டபுரம் Mārttāṇḍapuram

இவ்வூர் 'செங்கோட்டைக் கறைவாசலுக்குச் சேர்ந்த கிளாங்காடு மணியத்தில் உள்ள' தாகக் குறிக்கப்பட்டிருக்கிறது.

சாசனம் — **961**] [D. 3745

ஊருக்கு வடக்குப் பக்கத்தில் எல்லைக் கல்லிலிருந்த சிலாசாசனம்.

On the boundary stone set up to the north of the village.

Record dated in Śaka 1522, Vyaya, Tai 12, corresponding to the 38th year of the reign of the Later Pāṇḍyan king **Alagan Perumaḷ Ativirarama** *alias* **Srivallabhadeva** registering the creation of a new village Srival[l*]abha-nallūr. Perumaḷ Śrivallabhadeva, 'who revived the past' is referred to in the record.

கெண்ட திரு வீட்டுக்கு ஊட[1] சகாப்தம் ௲௫௱௨௰௨-ன் மெல் செல்லா னின்ற ஸ்ரீ பெருமாள் அளகன் பெருமாள் அதிவீரரும ஞன ஸ்ரீ வல்லப தேவருக்கு யாண்டு ௩௰௮-வது விய ௵ தைய் ௴ ௰௨-தி ஸ்ரீ பெருமாள் இறந்த கால மெடுத்த சீவல மாரன் பண்டாரத்தில் கிளாங்காட்டூர் மாடைப் பிறத்துக் குடியெற்றுவிக்க சீவலவ நல்லூருக்கு எல்கையாவது: கீள் எல்கை மெல்ப் படியூர்ப் புதுக்குளந் திரு[த்*]துப் பத்துக்கு மெற்க்கு தென்னெல்கை ராநதைக்கி [வடக்கு] மெல் எல்கை கல்வெட்டுங் குளிக்கு [கிழக்கு] வட எல்கை பராக்கிறம பாண்டிய பெரியூருக்குத் தெற்க்கு ஆக இன்னான் கெல்கைக்குள்ப்பட்ட குறியிருக்கிற பலற்கும்..............ஆக யிந்தப்படியும் வந்தெறுங் குடிக்கு ஆறு மாத[த்*]தைக்கு இறையில்லாமலுங் குடியிருப்பாராகவும். விடை படை [கணக்கு] வீட்டு ௫ ௨ ௪ ௨. இந்தப்படிக்கு னாருடையான் எழுத்து [||*]

## விந்தனூர் — Vindanūr

*மக்கென்ஸியின் பிரதியில் இவ்வூர் 'செங்கோட்டைக் கறவாசலுக்குச் சேர்ந்த சாம்புவர் வடகரை மணியத்துக்குச் சேர்ந்த விந்த நெல்லூர்' என்று குறிக்கப்பட்டிருக்கிறது.*

சாசனம் — **962**] [D. 3743-௰௩

*அவ்வூரில் பாழுங் கோட்டையில் உள்ள அழகிய மணவாளப் பெருமாள் கோவிலுக்குத் தென்பக்கத்திலிருந்த சிலாசாசனம்.*

On the south wall of the temple of Aḷagiya-maṇavaḷapperumaḷ, otherwise known as Sundararājaperumāḷ. Record dated in the 2nd + 10th year, Rishabha 7, ba. dvitīya, Sunday, Mūla, in the reign of the Pāṇḍyan king Jaṭilavarman *alias* Tribhuvana chakravartin **Srivallabhadeva** registering the gift of 10 *mā* of land as *tiruviḍaiyāṭṭam* to meet the expenses of the daily worship, offerings, garland, lamps, etc. to god Aḷagiya-maṇavāḷap-perumāḷ of Vindanūr in Kurumarai nāḍu.

---

1. இந்தப் பகுதி விளங்கவில்லை.

ஸ்வஸ்தி ஸ்ரீ [||*] கொ ஜடிலவந்மரான த்ரிபுவன சக்ரவத்தி-கள் ஸ்ரீ வல்லபதெவர் நம் யாண்டு இரண்டாவதின் எதிர் பத்தாவது. ரிஷப ஞாயறு எ உ-ந் தியதியும் அபரபக்ஷத்து துதியையும் நாயிற்றுக் கிழமையும் பெற்ற மூ(த)லத்தின் நாள் குறுமறை நாட்டு விந்தனூரில் நாயனார் அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் திருவாராதனத்துக்கு அமுது படி பாலமுது படி நெய்யமுது திரு விளக்கு எண்ணெ எண்ணெக் காப்புத் திருமாலை திருப் பரிவட்டம் சாத்துப்படி இலையமுது அடைக்காய் அமுது உள்ளிட்ட நி[த்*]தி நியமத்துக்கு திருவிடையாட்டமாக விட்ட நிலம் பத்து மாவுக்கு இன்னாட்டு இவ்வூரில் பெறிய குளத்தின் கீள் கண்டுழவில் விட்ட உ க உ-ருமாவும் திருப்பில் விட்ட உ ரு மாவும் ஆக க உ ய-மாவுக்கும் நம் அதிகாரி தடைக் கூட்டாள[இ]ட்டு வரக் காட்டினதை தட்டிப்படி பலாற்றுக்கு மெற்க்கு ச-ங் கண்ணாறும் ரு-ங் கண்ணாறும் தடி பல விட்ட கிழக்கு [காலிடை][1] க உ. உ ஹு கீழ ரூ--ல் கீழக் கடை ய உ ல ஷு-ம் [இதன்][2] தெற்கு [காலிடை] க உ. உ கீழ் சூ ம இதன் கிழக்கு காலிடை க உ உ ஜ ஷு ம் [இதன் காலிடை] வடமெற்க்கு [காலிடை] உ உ சு ல-ம் [இதன்] கிளக்கு க உ உள சூம் [இதன்] தென் மெற்க்கு [காலிடை] உ உ உ ஙு ஷு ளம் [இதன்] வட கிழக்கு [காலிடை] உ சு ஷு க ளும் ரு-ங் கண்ணாறு மெற்க்கு காலிடை க. உ ஙு ஷு வும் [இதன்] மெற்க்கு [காலிடை] க உ தங்ப இதன் மெற்க்கு காலிடை க உ உ ல ஷு எ-கூம் இதன் மெற்க்கு காலிடை க உ உ ஷு எ தா இதன் மெற்க்கு காலிடை க உ உ ஷு எம் இதன் மெற்க்கு காலிடை க உ உ ல எம் ஆ உ ரு மாவும் பலாற்றுக்கு கிழக்கு ரு-ங் [கண்ணாறுக்] கிழக்கு காலிடை க உ ல ஷு ம் [இதன்] தென் கிழக்கு [காலிடை] க உ ஷு ம் [இதன் காலிடை] கிழக்கு காலிடை க உ உ ங ஜ ஷு சூ ஜ [இதன்] தென் கிழக்கு காலிடை உ உ ரி எ ரூ-ம் [இதன் வடக்கு] காலிடை க உ உ ரூ-ம் [இதன்] கிழக்கு ரு உ உ ள ரூ-ம் இதன் வடக்கு கு க உ ல ள தாம [இதன்] கிழக்கு காலிடை க உ ஷு எ [இதன் கிழக்கு காலிடை] க உ ல ஷு ரூ-ம் [இதன்] தெற்கு காலிடை க உ உ ஷு ரூ இதன்] வடகிழக்கு காலிடை க உ சு ஷு எ சூ ம [இதன்] தென் கிழக்கு காலிடை க உ உம் [இதன் கிழக்கு] காலிடை க உ ல ள தல

1. 'கலி' என்பதைக் கூட்டெழுத்தாக எழுதிய மாதிரி சூ போன்ற ஒரு குறியீட்டால் எழுதப்பட்டிருக்கிறது.

2. 'இட' அல்லது 'இஉ' என்பதைக் கூட்டெழுத்தாக எழுதிய ஒரு குறியீடாக இருக்கிறது.

[இதன்] வடக்கு காலிடை உல ஊரு-ஷூ எம [இதன்] வடக்கு காலிடை கல உவு ரூ-ம [இதன்] மெற்க்கு காலிடை கல ஊஐதா [இதன்] கிழக்கு கலி உல ஙிஷூ உ கலிஞு [இதன்] வட மெற்கு கலி கல ஷூ ள ரூ- [இதன்] கிழக்கு கலி கல ஙிஷ [இதன்] மெற்க்கு கலி கல ஊளத [இதன்] கிழக்கு கலி கல [இதன் வட]மெற்க்கு சடை மஉஷூதும் ஆ கல ரு மாவும் ஆ இவ் வகைப்படி ம. மாநிலமும் (இரண்டாவதின்) உ-வதின் எதிர் ம-வது பசான முதலுக்குத் திருவிடையாட்டமாக கண்டுமுழவில் விட்ட உ ரு மாவும் கண்டுமுழவாக உழுவித்து கொண்டு மதிப்பில் விட்ட உ ருமாவுக்கும் திரப்ப மரியாதிகரம் கொள்ளும்படியும் கற் பித்தருளவக்கு இம் மரியாதியிலெ இவ்வெல்லை பிடிபாடாக கல் விலும் செம்பிலும் வெட்டி கையாண்டு திருவாராதனம் நடத்திப் பொகவும். பாற்க்க. இவைத் தச்ச நென்மலி உடையான் கை யெழுத்து[1] [॥*]

சாசனம்—963] [D. 3743-மச

டை கோவிலுக்கு வடக்கு விமானத்திலிருந்த கிலா சாசனம்.

இதுபோன்ற சாசனம் ஒன்று அவ்வூரில் மூலஸ்தானேச்வரர் கோவி லில் அம்மன் கோவில் முன் மண்டபத்துக் கிழக்குப் புறச் சுவரில் பொறிக் கப்பட்டிருப்பதாகத் திருவாங்கூர் ஆர்க்கியலாஜிகல் சீரிஸ், I வால்யூம், 262-63-ஆம் பக்கங்களில் 'H' குறியிட்டு வெளியாகி இருக்கிறது.

On the north wall of the central shrine in the same temple. Record dated in the 2nd+9th year, Tulā 2, ba. das'amī, Friday, Śatabhishaj in the reign of the Later Pāṇḍyan king Jaṭilavarman *alias* Tribhuvana chakravartin **Alagan Perumal Parakarama Pandyadeva**, registering the grant of some lands to the *Śrīvaishṇavas* of the temple of Aḻagiya-maṇavāḷapperumāḷ at Vindanūr in Kurumarai-nāḍu for the mid-day *pūja* to the god, by prince Parākrama Pāṇḍya, born in the asterism Tiruvadirai and the younger brother of the king.

A similar inscription said to be engraved on the east wall of the maṇḍapa in front of the Amman shrine in the Mūlasthānēs'vara temple at Sāmbūr-Vaḍakarai has been published as item 'H' in pages 262-63 of the **Travancore Archaeological Series**, Vol. I.

---

1. நில அளவைக் குறிக்கும் குறியீடுகள் அதிகமாக இந்தச் சாசனத் தில் பயிலப்பட்டுள்ளன. அவற்றையும் சரியாகப் பெயர்த்தெழுதாமையால் நன்கு விளங்கவில்லை.

ஸ்வஸ்தி ஸ்ரீ [||*] கொஜடிறு வஜ-ரன த்ரி,ஹவந அக்ரவக்த-கள் அண்ணாழ்வி அழகன்(ப்) பெருமாள் பராக்கிரம பாண்டிய தேவருக்கு யாண்டு இரண்டாவதின் எதிர் ஒன்பதாவது துலா ஞாயறு ரெண்டாந் [தியதி*]தியும் அபர பக்ஷத்து நாள் தசமியும்[1] ஸௌக்ருவாரமும் பெற்ற ஸதெயத்து நாள்: திருவாதிரை நாட் பிரந்(து)[த] பராக்கிரம பாண்டிய தெவர் என்று பெர் உடைய நாம் குருமரை நாட்டு விந்தனூர் நயினார் அழகிய மணவாளப் பெருமாள் நயினார் திருப்பதி ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு: இன்னயினாருக்கு உச்சந்தி திருவாறுதனைக்கு திருவிடையாட்டமாக விட்ட இவ்வூர் ஒட்டன் குளமான அழகிய மணவாளப் பெருமாளுக்கு[2] பெரு நாங்கு எல்கையாவது; கிழ் யெல்கை பெரிய[3] குளத்தில் நீர்க்காலுக்கும் கொட்டைக்கு ளுக்கெ[மேற்கு] தென் எல்கை செங்குளத்துக்கும் ஆயிக்குடிக்கும் பொறவழி மெ வடக்கு மெல் எல்கை பஞ்சபாண்டவர்கள் படுக்கை ஒடைக்குக் கிழக்கு வட யெல்கை திழைடை பெரு வழிக்கும் பெரிய குளத்து நீர்க்கல்லுக்கும்[4] தெற்கும[ாக*] இன்னங்கு எல்லைக்குள்பட்ட நஞ்சை புஞ்சை மாவடை மறவடை கொடித் தொட்டம் (ப)[ம]த்தும் எ[ப்பெ*]ர்ப்பட்ட ஸஉதெ ப்ராப்திகளும் திருவிடையாட்டமாக கையாளும்படியும் கற்பித்து யிந்தக் குளத்தில் பாரிலெ நம்பு (த்)தாமரைக் கண விருத்தியாக்கு[5] கெத நிலம் ஒரு மாவும் திருவாராதனைக்கு நடத்திப் பொகவும் [||*]

சாசனம்—964] [D. 3743-ம்

ஷை கோவிலுக்கு மேற்குப் பக்கத்திலிருந்த சிலா சாசனம்.

திருவாங்கூர் ஆர்க்கியலாஜிகல் சீரிஸ், I வால்யூம், 271–2-ஆம் பக்கங்களில் 'O' குறியிட்டதாக இது பிரசுரிக்கப்பட்டுள்ளது. அவ்விடத்திலே குறையாக உள்ள இச் சாசனம் மக்கென்ஸி பிரதியில் பூர்த்தியாக இருக்கிறது.

---

1. மேலே குறிப்பிட்ட பிரதியில் 'வ்ராதசமி' என்று காணப்படுகிறது.

2. 'அழகிய மணவாளப் பெரொரிக்கு' என்று வாசிக்க.

3. இது ஒரு குறியீட்டால் எழுதப்பட்டிருக்கிறது.

4. 'கடையம் பொழலைப் பற்றுக்கும் பெரிய குளத்தில் நீர் நக்கலுக்கும்' என்று மற்றப் பிரதியில் காணப்படுகிறது.

5. 'செந்தாமரைக் கண்ணார்க்கு' என்று வாசிக்க,

On the west wall of the same shrine. Record dated in Śaka 1472, corresponding to the 7th year, Sādhāraṇa, Uttarāyaṇa, Mithuna 19, Monday, Śu. dvitīyā, Punarvasu, corresponding to A. D. 1550, June 16, in the reign of the Later Paṇḍya king Jaṭilavarman *alias* Tribhuvana 'chakravartin Kōnērinmaikoṇḍān **Kulasekharadeva** *alias* **Parakrama Pandyadeva, the** son of Abhirāma Parākrama Pāṇḍyadēva registering the appointment of Aḻagiya S'okkanār Sundarattōḷuḍaiyān of the Kauśika-*gōtra* and the Bōdhāyana *sūtra* as the hereditary accountant on a salary of ⅛ *paṇam* and ⅛ *kōṭṭai* of paddy per mensem in the temple of Gōvindarājapperumāḷ at Vindanūr by Tirunelvēlipperumāḷ, the son of Abhirāma Parākrama Pāṇḍyadēva and who was born in the *nakshatra* Aśvati.

This has been published as item 'O' in pages 271-2 of the **Travancore Archaeological Series,** Vol. I. where the text is incomplete.

ப்ரஹ்மாதிதேவதாம் மௌளிமாலாலாலித பாதுகம் |
விந்தாபுர ஸமாவிஷ்டா கோவிந்தராஜ ஶாஸநம் ||[1]

[ஶகாப்தம்*] ௲௪௱௭௰௨-ன் மேல் செல்லா நின்ற ஸ்வஸ்தி ஸ்ரீ கோ ஜடிலவர்ம்மரான திரிபுவநச் சக்ரவர்த்தி கோனேர்மை கொண்டான் அபிராம பராக்ரம பாண்ட்ய தேவர் நந்தநரான நம குமாரன் குலசேகர தேவரான பராக்ரம பாண்ட்யதேவருக்கு யாண்டு எ-டாவது ஸாதாரண ஸம்வத்ஸரத்து உத்தராயணத்து மிதுந நாயற்று ௰௯-தேதியும் பூர்வ பக்ஷத்து த்விதீயையும் ஸோமவாரமும் ந...ர...நத

1. இந்தச் சாசனம் மிகவும் பிழைபடப் பிரதி செய்யப்பட்டுள்ளது. இதன் சரியான உருவம் பின் வருமாறு:

ப்ரஹ்மாதி தேவதா மௌளிமாலாலாலித பாதுகம் |
விந்தாபுரி ஸமாவிஷ்ணோ: கோவிந்தராஜ ஶாஸநம் ||

இதன் தமிழ் மொழி பெயர்ப்பு

பிரம்மா முதலிய தேவர்கள் வணங்குவதால் அவர்களுடைய முடிகளை மாலையாக அணிந்த பாதங்களையுடையவரும் விந்தாபுரியில் வாசம் பண்ணும் விஷ்ணுவுமான கோவிந்தராசருடைய சாசநம்.

யெம்மும் ஸ.............மும் பெ.............வளர.........[1] கௌஶிக மொத்ரத்து வொயாயன ஸூத்ரத்து அழகிய சொக்கனர் சுந்தற தெவருடையானுக்கு[2] நம் வீட்டுக்கு நம் கணக்குக் காணியாக்ஷி யாகக் கொடுத்து மாதம் ஒன்றுக்குப் பணம் முக்காலும் கொட்டை முக்காலும் [.......] அசலுக்கு ஒத்த ஷேதஞங்களும் கொடுத்து கற்பித்து நம் குமாறன் ஆஸ்ரீரங்க வராஜ தெவர் நக்ஷநான அஸ்வதி நக்ஷத்திரத்து ஜாதனாய(ர்) பெருமா(னுக்கு)[ள்] திருநெல் வெலிப் பெருமாள் ஓலே நம் காரியம் பார்க்கும் கொனெரி அப்பனும் நம் காரியக் கணக்கு களியனும் நம் கானிதாக்[3] கணக்கும் வளத்துருவாக்கும் பெருமானும் ஆனூத்து வெங்கடத்துரைவானும் நம்முடன் வந்து சொல்லுகை யால் சுந்தறத் தெவருடையானுக்கு[3] நம் கணக்கு காணியாக்ஷியா கக் கொடுத்து மாஸம் ஒன்றுக்கு முக்கால்ப் பணமும் முக்கால் கொட்டை நெல்லும் பற்றிக் கொண்டு நம் வீட்டில்க் காலை ஆதா யத்துக்கும் கணக்கும் எழுதிக்கொண்டு சூர்யசந்த்ராக்கவரை ஸந்ததி ப்ரவெஶம செம்பிலும் சிலையிலும் வெட்டி கையாண்டு கொள்ள வும் [॥*]

---

1. இந்த இடம் சாசனத்தில் காண்பது போலவே ஒரு வகையாகக் கிரந்தமும் மலையாளமும் கலந்து எழுதியிருக்கிறது. 'வஸ்ராவாத யொமமும் வஸிஷ்ட காரணமும் பெற்ற வானர்வம்ஸத்து நாள் சொதுகுல வஸெஷ யாரில்' என்று திருவாங்கூர்ப் பதிப்பில் கண்டபடி பூர்த்தி செய்து வாசிக்க.

2. 'அழகிய சொக்கனை சுந்தரத்தொழுடையானுக்கு' என வாசிக்க.

3. 'தானிகர்' என்று வாசிக்க.

# மைசூர் ராஜ்யம்

# MYSORE STATE

இவ்விடம்கொடுக்கப்பட்டுள்ள 14 சாசனங்களும் மைசூர் ராஜ்யத்தில் ஹாஸன் ஜில்லாவில் கிடைத்தவை என்றே தெரிகிறது. அவை தமிழில் உள்ள சாசனங்கள் அல்ல; கன்னடத்திலும் ஸம்ஸ்கிருதத்திலும் உள்ளவற்றின் தமிழாக்கம்.

## ஆசனம் (ஹாஸன்) Hassan

ஹாஸன் ஜில்லாவின் தலைநகராக விளங்குவது. ஊரிலே உள்ள விருபாக்ஷ சுவாமி கோவிலில் [ரங்க மண்டபத்தின் பக்கத்திலே உள்ள ஒரு கல்லில்] காணும் சாசனம்.

### சாசனம் —965] [D. 2783

கல்லில் காணப்படும் சாசனம் கன்னட மொழியிலும் லிபியிலும் உள்ளது. அதன் தமிழாக்கமே இவ்விடம் உள்ளது. இதிலே கிரந்த எழுத்தில் வரும் பகுதி எட்டிலே தெலுங்கு எழுத்தில் காணப்படுகிறது.

கன்னட சாசனம் எபிகிராபியா கர்நாடிகா, V வால்யூம், ஹாஸன் 1 ெந. ஆக வெளியாகி யுள்ளது.

[On a stone near the raṅga-maṇḍapa] in the Virūpaksha temple Tamil version of a Kannaḍa record dated in Śaka 1454, Khara, Vaiśākha, S'u. pañchamī, Monday in the reign of the Vijayanagara king **Achyutadevaraya Maharaya** registering the gift of the village Uddūru, to the temple of god Virūpāksha of Hāsan by Ellappan, son of Tipparāja [who was the sister's son of Chennapaṇṇa, an officer of the king]. The gift was made over to Dēvara-Bhaṭṭa, agent of the temple to meet the expenses of feeding twelve brahmaṇas every day and for the worship in the temple, for the merit of the above-said Chennapaṇṇa.

The Śaka year was current for the cyclic year Khara. The other details of the date are irregular.

The original record has been published as Hn. 1 in the **Epigraphia Carnatica**, Vol. V.

[illegible] ।
[illegible] ॥

விசயாப்புதைய சாலீவாகன சகை சகாப்தம் கற வருஷம் வைசாக சுத்த பஞ்சமி சோம வாறத்திலெ ஸ்ரீமன் மகாருசாதிருச ருச பறமெசுவற அச்சுத மகாருயர் விசய நகரி பட்டணத்திலெ சுக சாம்பிருச்சியாதி ருச பொகத்தை ரெக்ஷிசசுக் கொண்டு யிருந்த ஸ்ரீ நறசிங்கன மகன் வீரகிஷ்ணருயனுக்கு தம்பி: வித்தியா நகரி பட்டணத்திலெ எவ்வருச்சிய பரிபாலன பண்ணின திருமலைருயன் குமாரம் சென்னப்பண்ணருயன் ஸ்ரீ மகாதெவ பூசாபறனுயிருக்குரவன் கவி செனங்களை ரெக்ஷிக்கிரவன் : திப்பருச கெறப்பத்துலெ உண்டாயிருக்குர எல்ல பூபனுக்கு குடுத்த ஆசனத்து சீமை வ[ட]க்கு புறத்திலெ உத்தூர் எங்குர கிருமம் எல்லப்பண்ண னுய்க்கன் தங்கள் தன்னுடய சென்னப்பண்ண ருயனுக்கு புண்ணியம் வறவெணுமென்று ஆசனத்து விறுபாக்ஷ தெவருக்கு குடுத்த ஆசனத்து சீமை உத்தூரு கிருமம் [illegible] குடுத்தத்துலெ அந்த கிருமத்துக்கு உண்டான அஷ்டபொக முதலான சமஸ்தமும் எல்லப்பனுயக்கற் விறுபாக்ஷ தெவஸ்தானத்துக்கு கற்த்தருயிருக்குர தெவற பட்டருடைய கய்யிலெ சகிறண்ணிய உதக பூருவகமாய் ஸ்ரீ விறுபாக்ஷ லிங்காற்பிதமாய் ஆகவெணுமென்று உன்றெடெ கூட பன்னிரெண்டு பெற் பிருமணற்கள் பொசனம் பண்ணிக் கொண்டு சந்திர சூரியன் உள்ள மட்டுக்கும் நடக்கபடுமென்று குடுத்த ஸ்ரீ அச்சுத ருயற் சென்னப் பண்ணனுக்கு னுயக தனத்துக்கு விட்டு ரெக்ஷிச்ச ஆசன சீமை வடக்கு புறத்துலெ உத்தூரு கிருமத்துலெ சகல பொகமும் தற்மம் பண்ணி விட்ட தற்ம சாசனம்.

ஸ்வதத்தாம் பரதத்தாம் வா யோ ஹரேத வஸுந்தராம் ।
ஷஷ்டிர்வர்ஷ ஸஹஸ்ராணி விஷ்டாயாம் ஜாயதே க்ரிமி: ॥

[யிந்த சாசனம் நறசிங்கருய மகன் கிஷ்ணருயற் தம்பி அச்சுதருயற் காலத்திலெ சென்னப்பண்ண சருதாருக்கு மருமக[ன்] திப்பனுயக்கன் (மரு)மகன் எல்லப்பனுயக்கன் விட்டுது. ஆசனத உத்தூரு கிருமத்து சாசனம். உ][1]

---

1. இந்தச் சாசனத்தின் அடியில் 'எல்லப்பன்' என்ற கையெழுத்து தமிழில் வெட்டப்பட்டிருப்பதாக எபிகிராபியா கர்நாடிகாவிலிருந்து தெரிகிறது.

ஆராய்ச்சி : மேற்பார்வை ; அதைச் செய்யும் அதிகாரி ; அவர்களுக்காக இறுக்கும் வரி. காரிய ஆராய்ச்சி என்றும் குறிக்கப்பெறும்.

ஆழிக்கல் : விஷ்ணு ஆலயங்களுக்குச் சொந்தமான நிலங்களின் எல்லையைக் குறிக்க, சக்கரம் பொறிக்கப்பட்டு நட்டிருக்கும் கல்.

ஆள் அமஞ்சி : கூலி இல்லாமல் வேலை செய்பவன்.

ஆனைச் சாலை : யானைகளைக் கட்டும் இடம் ; அதற்காக வசூலிக்கப்படும் சிறு வரியையும் இது குறிக்கும்.

இடங்கை : இடங்கைச் சாதிகள்.

இடங்கை வரி : இடங்கைச் சாதியார் செலுத்த வேண்டிய வரி.

இடையர் வரி : மாடு மேய்ப்பவர் இறுக்கும் வரி.

இறங்கு சாத்து : கொடி இறக்கம், விடாயாற்றி ஆகியவற்றின் போது கோவில்களில் அதிகப்படியாக நடத்தும் விசேஷங்கள்.

இறை : அரசாங்கத்துக்கு இறுக்கும் வரியைப் பொதுவாக உணர்த்தும் சொல். எனினும் நிலவரியைக் குறிப்பதாகவே கொள்ளப்படுகிறது. இறைக்கடன் என்றும் குறிக்கப் பெறும்.

இறையிலி : எந்தவிதமான வரியும் இல்லாமல் அளிக்கப்படுவது. சில சமயங்களில் 'முதல் அடங்கல் இறையிலி' என்றும் குறிக்கப்படும். கிராமக் கணக்குகளில் முதல் அடங்கலிலே அவ்விதம் பதிவாகியிருப்பதை அது குறிக்கும்.

இலாஞ்சனைப் பேறு : அரசனுடைய முத்திரையைப் பொறிப்பதற்காகச் செலுத்த வேண்டிய கட்டணம்.

இனவரி : அந்த அந்தச் சாதிக் கூட்டத்தாருக்கும் சாதித் தலைவர்களுக்கும் சாதியினரின் பொதுக் காரியங்களுக்கும் கொடுக்கும் வரி.

ஈழம் புஞ்சை : கள் இறக்குவதற்கு விதிக்கும் வரி. பல்லவர்களின் ஆட்சிக்காலத்தில் இது ஈழம் பூட்சி என்று வழங்கப்பட்டு வந்தது.

உகவை : கல்யாணம் போன்ற சந்தோஷ காரியங்களுக்குச் செலுத்தும் வரி ; 'உகப்பார் பொன்' என்றும் சாசனங்களிலே குறிக்கப்பட்டுள்ளது. 'கண்ணாலக்காணம் என்று குறிக்கப்பெறுவதும் இதுவே ஆகும். [இந்தச் சொல் பெரும்பாலும் கொங்கு நாட்டுச் சாசனங்களிலேதான், அதுவும் எலவை என்னும் சொல்லுடன் கூடிக் காணப்படுகிறது. எலவை என்பது அந்தராயம், உள்வரி என்ற பொருளிலே உள்ளதென்றும், அதை ஒட்டி உகவையைப் பாட்டம் என்பதாகக் கொள்ளலாம் என்றும் சிலர் கருதுவர்.]

உசாவடி: சாவடி என்பதன் வடிவமே இது. பழைய நாளில் கோட்டம், கூற்றம் என்பன போல ராஜ்யத்தின் பகுதியைக் குறிப்பதாக வழங்கி வந்தது.

உடல்: கோயிலில் தர்மத்தை நடத்துவதற்கு முதலீடாகக் கொடுத்த நிலம். முதலைச் செலவழிக்காமல் அதன் வரும்படியைக் கொண்டே தர்மத்தை நடத்தவேண்டும்.

உண்ணாழிகை: கோவிலின் கர்ப்பகிருகப் பகுதி; திருவுண்ணாழிகை என்றும் குறிக்கப் பெறும்.

உதிரப்பட்டி: போரில் உயிர் துறந்தவர்களின் ஞாபகமாகவும் அவர்களுக்காக எழுப்பிய சின்னத்தைப் பாதுகாக்கவும், அவ்விதம் இறந்தவர்களின் வழி வந்தவர்களுக்கு அளிக்கப்படும் நிலம்.

உப்பாயம்: உப்புவரி.

உள்வரி: அந்தராயம்; ஸ்தல ஸ்தாபனங்களுக்கு இறுக்கும் வரி. அவ்விதம் செலுத்தவேண்டிய வரிகளை நிச்சயித்து அரசாங்கத்தார் விடுக்கும் ஓலையையும் குறிக்கும்.

உள்ளாலை: உள் பகுதி.

ஊர்: வேளாண் மக்கள் குடியிருப்பான கிராமம். அவ்வூருக்கு அமைந்த சபையையும் குறிக்கும்.

ஊர்க்கடமை: ஊர்ப் பொதுக் காரியங்களை நடத்துவதற்காக இறுக்கும் வரி.

ஊர்க்கீழ் - இறையிலி: ஊர்ச் சபையால் வரி நீக்கப்பட்ட நிலம். என்றாலும் அதற்காகச் செலுத்தப் பெறவேண்டிய வரியை ஊரார் தங்களுக்குள்ளே பகிர்ந்து அரசாங்கத்துக்குச் செலுத்த வேண்டும்.

எச்சோறு: இரவு நேரத்தில் கிராமத் தொழிலாளிகளுக்கு இடும் சோறு. எற்சோறு என்பதே சரியான வடிவம், இவ்விதமும் கல்வெட்டுக்களில் காணப்படும்.

எண்ணெய்: எண்ணெய் வியாபாரத்தின் மீது விதிக்கப்பட்ட தொழில் வரி.

எலவை: மரண வரி; இறந்தவர் உடலை இடுகாட்டிலே அடக்கம் செய்வதற்காகக் கொடுக்கும் பொன். ['நாடென்ற எலவை' எனப் புதுக்கோட்டைச் சாசனம் ஒன்று (263 ந.) குறிப்பதால் நாட்டார்க்கு (நாடு என்னும் சபைக்கு) இறுக்கும் சிறு வரியே ஆகும் என்று சிலர் கருதுவர். இதனோடு சேர்ந்து வரும் உகவை என்பது கல்யாணவரியே ஆகும். ஈரோட்டில் கிடைக்கும் பராந்தகன் காலத்துச் சாசனம் ஒன்று

கல்யாணப் பணமும் இடுகாட்டுப் பொன்னும் இறுக்க ஒப்புக்கொண்டதைத் தெரிவிக்கிறது. உகவை, எலவை என்னும் இரண்டுமே அவை என்பது விளங்கும்].

ஏரிப்பட்டி : ஏரிகளை அவ்வப்போது பழுது பார்த்துச் சீராக வைத்திருப்பதற்கு மானியமாகக் கொடுக்கப்படும் நிலம்.

ஏறு சாத்து : கொடியேற்றம். உற்சவ காலங்களில் கோவில்களிலே அதிகப்படியாக நடத்தும் விசேஷங்கள்.

ஒட்டச்சு, ஒட்டுக்காசு : ஓட்டியர்கள் இடையிலே சிறிது காலம் நாட்டைக் கைப்பற்றி ஆதிக்கம் செலுத்திய நாளிலே அவர்களுக்கு இறுத்த தண்டப் பணம். அவர்கள் ஆதிக்கம் நீங்கிய பின் அவர்கள் இழைத்த தீங்கை நிவர்த்திப்பதற்காக வசூலிக்கப்பட்டதையும் குறிக்கும்.

ஒரு பூ : ஒரு போகம் ; நிலத்தில் ஒரு தடவை விளைவது.

கடைக்கூட்டிலக்கை : முன்னாளில் வழங்கிய வரிகளுள் ஒன்று ; பொருள் சரியாக விளங்கவில்லை.

ஓலை : அரசன், அவனுடைய அதிகாரிகள் ஆகியோர் அனுப்பும் உத்தரவு.

ஓலைச்சம்படம், ஓலைச்சம்பளம் : கிராமத்துக்கு அதிகாரிகளின் ஓலையை எடுத்து வருபவனுக்குக் கொடுக்கும் சம்பளப் பணம்.

கடைப் பூ : கடைசிப் போகம் ; நிலத்தில் கடைசியாக விளைவது.

கண்ணாடி : முகம் பார்க்கும் கண்ணாடியைத் தயாரித்து விற்பனை செய்பவர்கள் இறுக்கும் வரி, கட்டணம்.

கடமை : அரசாங்கத்துக்குச் செலுத்த வேண்டிய வரிகளைப் பொதுவாகக் குறிக்கும் சொல்.

கர்ப்பூர விலை : தேவஸ்தான நிலங்களைப் பயிரிட்டு அனுபவிப்பதற்காக, அதன் மீதுள்ள வரியையும் சேர்த்து மொத்தமாகக் கொடுக்கும் விலைப்பணம்.

கழஞ்சு : முன்னாளில் வழங்கி வந்த பொன் நாணயம். அதன் எடையையும் குறிக்கும்.

காசுக் கடமை : தானிய வகையாக அல்லாமல் காசாக இறுக்க வேண்டிய வரிகளைப் பொதுவாகக் குறிப்பது.

காடு காவல் : காடுகளைப் பராமரிப்பதற்காக இறுக்கும் வரி. [காடு என்பது சுடுகாட்டையும் குறிக்கும்.]

காணிக்கை : தெய்வத்துக்கோ, பெரியவர்களுக்கோ சமர்ப்பிக்கும் பொருள். சாசனங்களிலே இச் சொல் அரசனுக்கும் அதிகாரிகளுக்கும் அவ்வப்போது காணிக்கை செலுத்துவதற்காக இறுக்கும் வரியைக் குறிக்கும்.

காணம் : கட்டணம்; செலுத்தவேண்டியதைக் குறித்த காலத்தில் செலுத்தாமல், காலம் கடந்து செலுத்துவதற்குத் தண்டமாக அதிகம் சேர்த்துக் கொடுப்பதைக் குறிக்கும்.

காணி : அனுபவிக்கும் உரிமை.

காணியாட்சி : பரம்பரையாக அனுபவிக்கும் உரிமை.

கார் : மழைக்காலத்தில் விளைக்கும் முக்கியமான நெற்பயிர். பெரும்பாலும் ஐப்பசி மாதத்தில் அறுவடை யாவது. அவ்விதம் விளையும் நெல் வகை ஒன்றுக்கும் பெயர்.

கார்த்திகைப் பச்சை : கார்த்திகை மாதத்திலே அறுவடைக் காலத்தில் கிராம ஊழியர்களுக்குப் பண்டிகை, பருவங்களுக்கெனத் தானியம் போன்ற வகைகளில் கொடுக்கும் இறும் போலும். அமரப் பச்சை என்பதையும் பார்க்க.

காராண் கிழமை, காராண்மை : பரம்பரையாக நிலத்தை உழுது பயிரிட்டு அனுபவிக்கும் உரிமை.

காரியப்பேறு : 'காரிய ஆராய்ச்சி' என்பதும் இதுவே போலும். ஸ்ரீ காரியப் பேறு என்றும் வழங்கப்பெறும்.

காலிங்கராயன் பணம் : கொங்கு நாட்டிலே காலிங்கராயன் அதிகாரம் செலுத்திவந்த நாளிலே அவன் செய்த மராமத்துக்களுக்காகக் குடிமக்கள் இறுத்த வரி.

கீற்று வரி : கீற்றுவேய்ந்த குடிசைகளுக்கு இறுக்கும் வரி.

குடி நீங்காத் தேவதானம் : ஏற்கெனவே மக்கள் குடியேறியுள்ள ஒரு கிராமத்தைக் கோவிலுக்குத் தானம் அளிக்கும்போது, அவ்விடம் உள்ள குடிகளையும் அவர்களுடைய உரிமைகளையும் நீக்காமல், மேல் வாரத்தையோ வரிகளையோ மட்டுமே கோவில் அடையும்படி அளிக்கும் கிராமம்.

குடிமை : நிலவரி தவிர, அரசாங்கத்துக்கு இறுக்கும் மற்ற வரிகளைப் பொதுவாகக் குறிக்கும் சொல். [நாட்டின் குடியாக வாழ்வதற்கு இறுக்கும் வரிப்பணம்]. குடிப்பணம் என்று வழங்கப்படுவதும் இதையே குறிக்கும்போலும்.

குதிரைப் பந்தி: குதிரைகளைக் கட்டும் லாயம். அதற்காக வசூலிக்கப்படும் சிறுவரியையும் குறிக்கும்.

குளவடை: ஏரி வரி; ஏரி குளங்களிலிருந்து மீன் பிடிப்பது போன்ற வகைகளில் கிடைக்கும் வருமானம்.

கூட்டிலக்கை: கிராமப் பாதுகாவலுக்காகக் கொடுக்கப்பெறும் சிறு வரி; கூட்டாகக் குடியிருப்பதற்கான வரியையும் குறிக்கும். கூத்திலக்கை என்றும் எழுதப்படுவது உண்டு

கூற்றரிசி: குத்திய அரிசி; அவ்விதம் அரிசி குத்துவோர்களுக்காகக் கொடுக்க வேண்டிய வரிபோலும். [அந் நாளிலே கோவில்களுக்கு நெல் கூற்றும் சாலை தனியாக இருந்ததென்று சில இடங்களில் காணப்படுகிறது.]

கைக்கோளர்: தோள்வலி மிகுந்த காலாட்படையினர்.

[கோவிலில் ஊழியம் செய்பவர்களுள்ளும் கைக்கோளர் பெயர் காணப்படுகிறது. அந் நாளிலே கோவில்களும் படைவீரர்களைக் கொண்டிருந்ததென்று தெரிகிறது.]

சண்டேசுரப் பெருவிலை: சிவன் கோவில் நிலங்களைப் பிறருக்கு விற்கும்போது கொடுக்கப்படும் நில விலை. சிவன் கோவிலைச் சண்டேசுரப் பெருமானே நிர்வகிப்பதாக ஐதிகம். கோவில் கணக்குகள் அவர் பெயரிலேயே நடைபெறுவது வழக்கம்.

சதுர்வேதி மங்கலம்: (நாலு) வேதம் தெரிந்த பிராமணர்களின் குடியிருப்பான கிராமம். பெரும்பாலும் அது அந்தப் பிராமணர்களுக்கு வரியல்லாமல் வழங்கப்பெற்றிருக்கும்.

சந்தி: காலையிலோ, மாலையிலோ, குறிப்பிட்ட வேளையில் கோவிலில் மூர்த்திக்கு நடத்தும் பூசை.

சந்தியாதீபம்: கோவிலிலே பகலும் இரவும் கூடும் வேளையில் ஏற்றும் விளக்கு. பெரும்பாலும் மாலையிலேதான் ஏற்றப்படுவது. சிற்சில சமயங்களில் காலையிலும் போடப்படும்.

சந்திராதித்தவத், சந்திராதித்தவல், சந்திராதித்தவற்; சந்திர சூரியர் உள்ளவரையில்.

சந்தி விக்கிரகப் பேறு: கிராமத்தின் மத்யஸ்தனுக்குக் கொடுக்கும் கட்டணம். பத்திரம் எழுதுபவர்களுக்குக் கொடுக்கும் கட்டணத்தையும் குறிக்கும்.

சபா வினியோகம்; சபையினால் இறை நீக்கப்பெற்ற நிலங்களின் வரிப்பணத்தை ஊரார் ஏற்றுக் கொடுப்பதிலே வரும் பங்கு.

சபை : அகரம், பிரம்மதேயம், சதுர்வேதிமங்கலம் என்னும் பிராமணர் குடியிருப்புக் கிராமங்களுக்கு அமைந்த சபை. ‘ குறி ’ என்றும் குறிக்கப்பெறுவது உண்டு.

சமுதாயப்பிராப்தி : குடிகள் பொதுவாக அனுபவிக்கும் நிலங்களிலிருந்து கிடைக்கும் வருவாய் ; அதே போல ஊர்ப் பொதுவுக்காகச் செய்யும் செலவு; இவற்றில் அவர் அவருக்கு வரும் பங்கு.

சருகூடை : சருகு கூடை என்பதே இப்படி ஆயிற்றுப்போலும். அவ்விதமானல் கிராமப் பொதுவான புறம்போக்கு நிலங்களிலிருந்து உலர்ந்த சருகுகளை அரிக்கும் உரிமையைக் குறிக்கும்.

சலாகை : முன்னளிலே வழங்கிவந்த நாணய வகை.

சாத்துப்படி : கோவில் விக்கிரகங்களுக்குச் செய்யும் அலங்காரம்.

சாவா மூவாப் பேராடு : இறத்தலும் மூப்பும் இல்லாமல் நிரந்தரமாக நிலைத்திருக்கும் ஆடு. [கோவில்களுக்கு அளிக்கும் ஆடுகளையே இவ்விதம் குறிப்பர் சாவினலும். மூப்பினலும் அவ்விதம் அளித்த ஆடுகளின் தொகை குறையும்போது, தாய் ஆடுகளின் குட்டிகளைக் கொண்டு நிரப்பித் தொகையைப் பூர்த்தி செய்து, கோயிலுக்குச் செலுத்தவேண்டிய நெய் போன்றவற்றை முட்டாமல் செலுத்த வேண்டும்.]

சாலா போகம் : அன்னசாலைக்காக வரியில்லாமல் விடப்பட்ட நிலம். அறச்சாலா போகம் என்றும் குறிக்கப்படும்.

சித்தாயம் : சிற்றயமே இவ்விதம் குறிக்கப்படுவது போலும். விஜயநகர மன்னர்களின் ஆட்சிக் காலத்தில் இது பொன்னக இறுத்து வந்த சிறு வரிகளைக் குறித்து வந்தது.

சில்லாயம், சிற்றயம் : சிறுவரிகள் ; சில்லிறை.

சிவிகைப்புறம் : கோவிலில் பல்லக்கு ஸேவைக்கான செலவுக்கு விடப்பட்ட நிலம்.

சிறுபாடிகாவல் : கிராமப் பாதுகாவலுக்காக நியமிக்கப்பட்ட ஊழியர்களின் சம்பளத்துக்காக இறுக்கும் பணம்.

சுங்கம் : வெளியிலிருந்து ‘ கலத்தினுங் காலினும் வரும் பண்டங்கட்கு ’ இறை.

சூலக்கல் : சிவன் கோவில் நிலத்தின் எல்லையைக் குறிப்பதற்காகச் சூல உருவம் பொறிக்கப்பெற்று நட்டிருக்கும் கல்.

சூலத்தாபனம் : சிவன் கோவில் நிலத்து எல்லையைக் குறிப்பதற்காகச் சூல உருவம் பொறித்த கல்லை நடுவது.

சூலவரி, திருசூலவரி : சிவன் கோவிலுக்காகச் சூலம் சூடுபோட்டு, விட்ட கோவில் மாடுகளின் பராமரிப்புக்காக வசூலிக்கப்பெறும் வரி.

சூளைத்திறை : கடைகளுக்கு இறுக்கும் வரி; முக்கியமாகப் படை வீடுகளில் உள்ளனவும் படையெழுச்சியின் காலத்தில் படையுடன் செல்லும் கடைகளும் ஆகியவற்றையே குறிக்கும். சூளை என்னும் சொல் பரத்தையரையும் குறிக்கும். ஆகவே பரத்தையர் செலுத்திய வரியும் ஆகும். கன்னடக் கல்வெட்டுக்களிலே இந்தப் பொருளில்தான் இது வழங்கப்பெற்றுள்ளது.

சேக்கிறை : செக்குக்காக கொடுக்கவேண்டிய சிறுவரி.

செட்டிறை, செட்டி யிறை : வியாபாரிகள் இறுக்கும் வரி.

சேவகத்தேவை: அரசனும் அதிகாரிகளும் ஊருக்கு விஜயம் செய்யும் காலத்தில் அவர்களுக்குச் சேவகம் செய்வதற்காக ஆட்களை நியமிப்பது ; அவர்களுக்கு உரிய கூலிக்கான வரிப்பணமும் ஆகும்.

சோடி : கோயில்களுக்கு உள்ள நிலங்களில், இறையிலி நிலங்களைத் தவிர்த்து மற்றவைகளுக்காக மிகக் குறைந்த விகிதத்தில் இறுக்கும் வரி. ஜோடி என்பதும் அதுவே.

தட்டார்பாட்டம், தட்டாரப் பாட்டம் : தட்டார் இறுக்கும் இறை.

தட்டோலி : சாசனங்களிலே இந்தச் சொல் 'தட்டாரப் பாட்டம்' என்பதனோடு சேர்ந்தே காணப்படுகிறது. கம்மாளரிலே வேறு வகையாரான கொல்லர் போன்றவர்கள் இறுக்கும் வரியையே இது குறிக்கும் போலும்.

தண்ட(ங்) குற்றம் : தண்டம், குற்றம் ஆகிய இரு சொற்களும் சேர்ந்து ஆகிய இத் தொடர் ஒன்றாகவே சாசனங்களில் காணப்படுகிறது. சில சமயங்களில் மன்றுபாடு என்பதனோடு சேர்ந்தும் வரும். இழைத்த குற்றத்துக்காகச் செலுத்தும் அபராதத் தொகையே குற்றம் எனப்படும். இதர வகையான அபராதத் தொகை தண்டம் என்னும் பெயரின்பாற் படும்.

தண்ணீர்க்காணம் : நீர்கூலி; நீர்ப்பாசனத்துக்காக இறுக்கும் வரி.

தர்ம தானம் : தர்மத்தை நடத்துவதற்காக இறையாக அளிக்கப் பட்ட நிலம்.

தறிக்கடமை, தறியிறை : நெசவுத்தறிக்கு இடும் வரி.

தனியூர் : பிறருடைய கண்காணிப்பு இல்லாமல் நிர்வாகம் முழு வதையும் ஊரில் உள்ளவர்களே நடத்திச் செல்லும் உரிமைபெற்ற ஊர். பெரும்பாலும் சதுர்வேதி மங்கலங்களாகவே இருக்கும்.

திருக்காமக் கோட்டம்: சிவாலயத்தின் உறுப்பாகத் தேவிக்குத் தனியாக எழுப்பப்பெறும் கோயில். அம்மன் கோயில்.

திருக்காவணம்: கோவில் நந்தவனம்; கோவில் மண்டபத்தின் அலங்காரமான மேற்றளத்தையும் குறிக்கும்.

திருக்கைக் கோட்டி: திருமுறை ஓதுவதற்கு உரிய கோயில் மண்டபம். திருக்கையோட்டி என்றும் சாசனங்களில் காணப்படும்.

திருச்சுற்றுலை, திருச்சுற்றுமாளிகை: கோயில் பிராகாரங்களும் அவைகளைச் சுற்றி எழுப்பிய திருமதில்களும்.

திருத்தோங்கல்: பூமாலை. பெரும்பாலும் பருத்துள்ளது.

திருநாமத்துக் காணி: சிவன் கோவிலுக்குச் சொந்தமான நிலம். 'தேவதானம்' என்னும் தலைப்பிலும் பார்க்க.

திருப்படிமாற்று: கோவிலில் தினசரி பூசை நிவேதனத்துக்கான படித்தரக் கட்டளை.

திருப்பள்ளித் தாமம்: கோவிலில் மூர்த்திகளுக்குச் சாத்தப்படும் மாலை.

திருப்பாவாடை: ஆடைவிரித்து அதன்மீது கோவில் மூர்த்திக்குப் படைக்கும் பெரிய நிவேதனம்.

திருமடைப்பள்ளி வரி: கோவிலின் மடைப்பள்ளிக்காக இறுக்கும் வரி.

திருமாளிகை: திருமாளிகைப்பத்தி என்பதன் சுருக்கம். கோவில் பிராகாரம்.

திருமுகம்: அரசன் உத்தரவு எழுதிய ஓலை.

திருவாய்க் கேழ்வி: அரசன் வாயால் சொல்லும் உத்தரவைக் கேட்டு உரிய இடங்களுக்கு அனுப்பும் பொறுப்பு வாய்ந்த அதிகாரி.

திருவிடையாட்டம்: விஷ்ணு ஆலயத்துக்குச் சொந்தமான நிலம். 'தேவதானம்' என்னும் தலைப்பிலும் பார்க்க.

திருவிளக்குக் குடி: கோவில் விளக்குக் கட்டளையை நடத்துவதற்காக மானிய நிலம் பெற்றுள்ளவர்.

திருவிளக்குடையார்: கோவிலில் விளக்கு ஏற்றுவோர்.

தீட்டு: எழுத்து மூலமாக உள்ள ஆதாரம்.

துலாபார வரி: அரசன் துலாபாரம் ஏறித் தானம் செய்வதற்காகக் குடி மக்கள் செலுத்தும் வரி.

தேவகன்மிகள், தேவர்கன்மிகள் : கோவில் காரியங்களை நிர்வகித்து வருபவர்கள்.

தேவதானம் : கோயில்களுக்குத் தானமாக அளிக்கப்பட்டுக் கோவில்களுக்கே சொந்தமாக உள்ள நிலம், கிராமம். பெரும்பாலும் கோவில் செலுத்த வேண்டிய வரி ஏதும் இல்லாமல் இருக்கும். இவ்விதம் உள்ளவைகளுள் சிவன் கோவில்களுக்குச் சொந்தமானது திருநாமத்துக்காணி என்றும் விஷ்ணு கோயிலுக்குச் சொந்தமானது திருவிடையாட்டம் என்றும் பெயர் பெறும்.

நகரம் : வணிகர்கள் வாழும் ஊர் ; அந்த ஊரின் சபையையும் குறிக்கும்.

நத்தவரி : கிராம நத்தத்திலே வீடு கட்டிக் குடியிருக்கும் நிலத்துக்காக இறுக்கும் வரி. மனைவரி என்பது அதுவே.

நல்லெருது : எடுத்துக் காட்டாக விளங்கக்கூடிய எருதைப் பரிபாலிப்பதற்காக ஏற்பட்ட வரி. 'காட்சி எருதுக்காசு' என்றும் குறிக்கப்படும்.

நற்பசு : எடுத்துக் காட்டாக விளங்கக்கூடிய நல்ல பசுவைப் பராமரித்து வைத்திருப்பதற்காகச் செலுத்தும் கட்டணம்.

நாட்டவர், நாட்டார் : பல கிராமங்கள் கொண்ட பகுதியான 'நாடு' என்பதற்குத் தனியாக அமைந்த சபை. அந்தச் சபையில் உறுப்பினர்களாக உள்ளவர்களையும் குறிக்கும்.

நாட்டார் பட்டி : நாடு என்னும் சபையார் விதித்து, அவர்களுக்கு இறுக்கும் வரி.

நாட்டுவினியோகம் : நாட்டவரால் இறை நீக்கப்பெற்ற நிலங்களின் வரிப்பணத்தை அவர்களே ஏற்றுக் கொடுப்பதில் வரும் பங்கு.

நாடு : பல கிராமங்கள் கொண்ட ஒரு பகுதி. அதற்கு அமைந்த சபையையும் குறிக்கும்.

நாடு காவல் : நாட்டின் காவலுக்குச் செய்யும் ஏற்பாட்டின் செலவைச் சரிக்கட்ட இறுக்கும் வரி.

நிமந்தம், நிவந்தம்: கோவிற் செலவுத் திட்டம்.

நிலவரி : இறைம் அல்லாத இதர நிலங்களின் மீது விதிக்கப்பெறும் நிலவரி. நிலவழி என்றும் குறிக்கப்பெறும்.

நீரோணி : நீர்க்கூலி.

நந்தா விளக்கு: கோவிலில் எப்போதும் எரிந்துகொண்டிருக்கும் வாடா விளக்கு. நொந்தா விளக்கு என்றும் குறிக்கப்பெறும்.

நெய்: நெய் வியாபாரத்தின் மீது இடப்பட்ட வரி.

நெல் முதல்: வரியாக இறுக்கப் பெறும் நெல்.

நெல்லாயம்: பணமாக இல்லாமல் விளைந்த நெல்லாகவே கொடுக்க வேண்டிய வரி. நெற் கடமை என்றும் குறிக்கப்பெறும்.

பச்சை: கிராமத் தொழிலாளிகளுக்குச் சில விசேஷ காலங்களில் இனமாக, பெரும்பாலும் தானியமாகவே கொடுக்கப்பெறுவது.

பசானம், பிசானம்: மழை இல்லாத நாளில் பாசனம் மூலம் பயிரிட்டு விளைவிப்பது. பெரும்பாலும் சித்திரை மாதத்தில் அறுவடையாவது. அவ்விதம் விளையும் நெல் வகை ஒன்றுக்கும் பெயர்.

பஞ்சுப் பீலி, பஞ்சு பீலி: பஞ்சு சம்பந்தமான வரி.

பட்டரை, பட்டறை: கேணிப் பாசனம் உள்ள நன்செய் நிலம். அவ்விதம் பயிர் செய்வதற்கு இறுக்கும் நீர்க் கூலியையும் குறிக்கும். பட்டிறை என்பதே இவ்விதம் தவறாக எழுதப்பட்டிருத்தலும் கூடும்.

பட்டிறை: பட்டுநூல், அதன் நெசவு முதலியவற்றின்மீது விதிக்கப்பட்ட வரி.

பண்டாரம்: பொருள் சேர்த்து வைக்கும் இடம்; கஜானா.

பதிபால மூலத்தார்: சிவன் கோவில் நிர்வாகத்தை நடத்துவதற்காக ஏற்பட்ட முக்கியமான சபை.

பலிசை: வட்டி.

பாடி காவல்: 'ஊர்க்காவல்' ஆகும்.

பார்பத்தியம்: நிர்வாகம்.

பிடிபாடு: உத்தரவு தாங்கிய ஓலை.

பிரம்மதேயம்: பிராமணர் குடியிருப்புக்காக அவர்களுக்கு மானியமாக அளிக்கப்பட்ட கிராமம். அகரப் பிரம்ம தேயம் என்றும் வழங்கப் பெறும்.

புரவு: நிலவரி. [சாசனங்களிலே இச் சொல் 'இறை புரவு' என்று சேர்ந்தே வழங்கப்படும். புறநானூற்றுப் பழைய உரையாசிரியர் (செய்யுள் 75) இறை என்றே இதை விளக்குகிறார். பயிரிடும் நிலத்தின்மீது வரியாக அரசாங்கத்துக்குப் போய்ச் சேர்வது இறை என்றும் மற்றவை புரவு என்றும் குறிப்பதாகக் கொள்ளலாம்.]

புல்வரி: ஊரில் உள்ள மேய்ச்சல் நிலங்களுக்காகப் பொதுவில் இறுக்கும் வரிப் பகுதி.

புறம்படி: வெளிப்பகுதி.

புன் பயிர்: எள், வரகு, கம்பு, சாமை போன்ற புன்செய்ப் பயிர்.

புன் பயிர்க் கடமை: புன்செய் நிலத்தில் விளையும் பயிருக்காக இறுக்கும் கடமை.

பொருட்செல வோலை: பணம் கொடுத்ததற்குப் பெறும் ரசீது.

பொலியூட்டு: பணத்தை வட்டிக்கு விடுதல்; கோவிலில் ஒரு தர்மத்தை நடத்துவதற்காகப் பெறும் பணத்தை வட்டிக்கு விட்டு அதனால் கிடைக்கும் வரும்படியைக் கொண்டு அந்தத் தர்மத்தை நடத்துவது.

பொன் வரி: தானியமாக அல்லாமல் காசாக இறுக்கும் வரி; [பூமியிலிருந்து தோண்டியோ ஆற்றில் படியும் வண்டல் மணலைச் சலித்தோ பொன் எடுப்பதற்காகச் செலுத்தும் வரியைக் குறிப்பதாக வும் இருக்கலாம்.]

மகமை: கோவில், சத்திரம் முதலிய பொது தர்ம ஸ்தாபனங் களின் செலவுகளுக்காக வசூலிக்கும் வரி; வியாபாரத்துக்கு வரும் சரக்குகளின் அளவு, விலை ஆகியவற்றுக்கு ஒரு விகிதாசாரம் வைத்து வியாபாரிகள் தாமாகவே கொடுக்கும் பணம்.

மகாசபை: பிரம்மதேயம், சதுர்வேதி மங்கலம் போன்ற ஊர் களில் சபையைத் தேர்ந்தெடுப்பதற்கு உரிமை பெற்ற அனைவரும் கூடிய சபை. மஹாஜனங்கள், பெருங்குறி என்றும் குறிக்கப் பெறும்.

மடைப்பள்ளி: கோவிலிலே நிவேதனத்துக்காகச் சமையல் செய்யும் இடம்.

மடப்புறம்: மடங்களின் செலவுக்காக விடப்பட்ட நிலம்.

மடவளாகம்: கோவிலைச் சுற்றியுள்ள பகுதியில் கோவில் ஊழியம் புரிபவர்களுக்கான குடியிருப்பு.

மண்டல முதல்மைப்பேறு: முன்னாளில் வழங்கி வந்த ஒரு வரி வகை; விவரம் விளங்கவில்லை.

மரவடை, மரவிடை: பயன் தரும் மரம்; அதற்குச் செலுத்த வேண்டிய வரியையும் குறிக்கும்.

மரியாதி: அளவு.

மறு : மறுபோகம். இரண்டாவது தடவை நிலத்தில் பயிர் செய்வது. மறு பூ என்றும் குறிக்கப்பெறும்.

மன்றுபாடு : நீதிமன்றத்தால் விதிக்கப்பெற்று அதற்குச் செலுத்த வேண்டிய அபராதத் தொகை.

மாகேச்வரர் : சிவனடியார்.

மாகேச்வரக் கண்காணி செய்வார் : சிவன் கோவில் நிர்வாகத்தில் ஈடுபட்டுள்ள சிவனடியார்; சிவனடியார் திருக்கூட்டத் தலைவர்.

மாவடை : நிலத்தில் அடங்கிய விலங்குகள் ; கிராமத்தில் கால் நடை அடையும் இடம்.

மாவிந்தக் கடமை : அரசனுக்கு இறுக்கும் கடமை. அரசுப் பேறு என்பதையே குறிக்கும் போலும்.

மீயாட்சி : மேல் வாரம். பல சமயங்களில் இது காராண்மை என்னும் சொல்லோடு சேர்ந்து வரும். காராண்மை என்பது நிலத்தைப் பயிர் செய்து அதன் விளைவை அனுபவிக்கும் உரிமை. இப்போது உள்ள வழக்குப்படி குடிவாரம் என்பதாகும். [மீ-மேல்.] ஆகவே இது மேல்வாரம் என்பதாகும்.

மீன்பாட்டம் : மச்ச மாகூல் ; ஏரி, குளங்களில் உள்ள மீன்களைப் பிடிப்பவர்கள் இறுக்கும் வரிப்பணம்.

முகம் பார்வை : கண்ணடி என்பதைப் பார்க்க.

முதல் எழுத்து : முன்னளில் வழங்கி வந்த ஒரு வரி வகை. ஆனல் விவரம் விளங்கவில்லை.

முதுகண் : வயது முதிர்ந்தவர்களின் மேற்பார்வை ; அவ்விதம் மேற்பார்வை இடுபவர்களையும் குறிக்கும். ' கார்டியன் '.

முற்றூட்டு : எந்தவிதமான வரியும் இல்லாதது ; சர்வ மானியம். பூர்ண அனுபவம் உள்ள நிலம்.

மூலபரிஷத், மூலபருடையார் : கோயில் நிர்வாகத்துக்குப் பொறுப்பு வாய்ந்த பெரிய சபை.

மெய்க் கீர்த்தி : சாசனங்களின் ஆரம்பத்தில் அரசன் புகழை எடுத்துக் கூறுவதாகச் சேர்க்கப்பட்டிருக்கும் செய்யுள் பகுதி ; பிரசஸ்தி என்றும் குறிக்கப் பெறும்.

மெழுக்குப்புறம் : கோவில் மூர்த்திக்குப் புழுகுச் சட்டம் பூசுவதற்கான செலவைச் சரிக்கட்டுவதற்கு விடப்பெற்ற நிலம்.

வண்ணார்பாறை, வண்ணாரப்பாறை: துணி வெளுப்பவர் செலுத்தும் தொழில்வரி. இது பாறைக்காணம் என்றும் கல்லாயம் என்றும் வழங்கப்பெறுவதுண்டு.

வராகன் புள்ளி குளிகை: முன்னாளில் வழங்கிய ஒரு நாணயம்.

வருஷ காணிக்கை: ஆண்டு தோறும் [அரசனுக்கு] செலுத்த வேண்டிய காணிக்கை.

வலங்கை: வலங்கைச் சாதிகள்.

வாசல் காணிக்கை: அரண்மனைக்கு வருஷந்தோறும் இறுக்கும் காணிக்கை. [வாசல்—அரண்மனை வாசல்].

வாசல் வினியோகம்: அரண்மனையாராலும் அதிகாரிகளாலும் இறை நீக்கப் பெற்ற நிலங்களின் வரிப்பணத்தை ஏற்றுக் கொடுப்பதில் வரும் பங்கு.

வாமன முத்திரை: விஷ்ணு ஆலயங்களின் நிலத்து எல்லையைக் குறிப்பதற்காக நடும் எல்லைக் கல்லில் பொறிக்கப்பட்டுள்ள சங்கு சக்கரங்களின் அடையாளம்.

வாலமஞ்சாடி: பழைய வரிகளுள் ஒன்று. எதைக் குறிப்பதென்பது விளங்கவில்லை.

வான் பயிர்: வான் பொழிந்த மழையைக் கொண்டு விளைவிக்கும் பயிர்.

வினியோகம்: இறை நீக்கப்பெற்ற நிலங்களின் வரிப்பணத்தை ஏற்றுக் கொடுப்பதில் வரும் பங்கு. [பலவகையான வினியோகங்களையும் பொதுவாகக் குறிக்கும் சொல்.]

வீரசம்பன் குளிகை: முன்னாளில் வழங்கி வந்த ஒரு நாணயம். 14-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் ஆண்டுவந்த வீரசம்பன் காலத்தில் முதலாக அச்சிடப் பெற்றது.

வீரராயன் புள்ளி குளிகை: முன்னாளில் வழங்கிவந்த நாணய வகை.

வேச்சமுது: சமைத்த சோறு. (கோவிலில் நிவேதனத்துக்காகத் தயாரிப்பது.)

வேஞ்சனம்: சமைத்த கறி, குழம்பு முதலியவை.

வேட்டி நிலை: வாய்க்கால் வெட்டு முதலியவை போன்ற கிராமப் பொது வேலைகளைக் கூலி பெறாமல் செய்வது. வேட்டியாள், வேட்டிபாட்டம் என்றும் குறிக்கப்பெறும்.

**வேளம் :** அரண்மனை ஊழியம் ; அரண்மனைச் சிப்பந்திகள் ; அவர்கள் வாழும்பகுதி.

**வேளைக்காரர் :** எந்தச் சமயத்திலும் அரசனையும் அரசையும் பாதுகாக்கத் தயாராக நிற்கும் படைப் பகுதியினர். அரசர்க்கு வேளைப்படி உரிய பணியைத் தாம் செய்ய இயலாதபோது தம் உயிரை மாய்த்துக் கொள்வதாக விரதம் பூண்ட பணியாளர்.

**வேண்டுகோள் :** அரசாங்கத்துக்கோ நியாயஸ்தலத்துக்கோ மனு எழுதி அனுப்பும்போது செலுத்தவேண்டிய கட்டணம்.

**ஜீவிதப் பற்று, ஜீவிதம் :** அதிகாரிகளாக உள்ளவர்களுக்கு அவர்கள் ஆயுட்காலம் வரையில் அனுபவிக்குமாறு அளிக்கப் பெற்ற நிலப் பகுதி. பெரும்பாலும் அது வரி வசூலிக்கும் பாத்தியதை, அதாவது மேல்வார பாத்தியதை மட்டுமே கொண்டதாக இருக்கும்.

**ஸ்ரீபண்டாரம் :** கோயிலின் கருவூலம் ; கஜானா.

**ஸ்ரீயக்கி பழஞ்சலாகை :** முன்னாளில் கொங்கு நாட்டில் வழங்கி வந்த ஒரு நாணயம்.

## பிற்சேர்க்கை III.

—o—

### சொற்றொடர்கள்

சாசனங்களிலே ஆரிய சொற்கள் ஆளப் பட்டுள்ளதைப் போலவே சொற்றொடர்களும் பயிலப் பட்டுள்ளன. அவைகளின் வரலாறே தனி ஆராய்ச்சியாக அமைந்துவிடும். அவ்விதம் வரும் சொற்றொடர்களில் சிலவற்றைக் கீழே கொடுத்திருக்கிறேன்.

கோத் தோட் டுண்ணப் பாலது எல்லாம்: அரசனுக்கும் அரசாங்கத்துக்கும் இறுக்கவேண்டியவை எல்லாம்.

கற்றைப்புல் போகா முற்றூட்டு: கன்றுக்குப் புல் வழங்கும் உரிமையும் போகாமல் உட்பட்ட சர்வ மானியம். [குழந்தைக்குப் பாலும் கன்றுக்கு புல்லும் இனமாகப் பெறும் உரிமை அந்நாளில் இருந்து வந்தது.]

நந்தமற எப்பேர்ப்பட்டாரும் பாற்படுத்திக் காக்க: அழிவு, குறை நேராமல் நன்றாகப் பாதுகாக்க வேண்டும்.

வெண்கலமேடுத்து மண்கலமுடைத்து: வரி வசூல் செய்வதற்கு எடுத்துக் கொள்ளும் கடுமையான முறை. விலையாகக்கூடிய பொருளைக் கைப்பற்றியும் விலையாக முடியாத மண்பாண்டம் முதலியவற்றை அவனுக்கும் உபயோகமாக முடியாதபடி உடைத்தும் துன்புறுத்துவது.

வயிராவி செத்தும்' என்ற தொடரும் சில சமயங்களில் இதனோடு சேர்ந்து காணப்படுவது உண்டு. கோவில்களுக்கு அளிக்கப் பெற்றுள்ள சாசனங்களிலேதான் அவ்விதம் காணப்படும். தன் உயிரைக் கொடுத்தும் கோயில் சொத்தைக் காப்பவன் வைராவி. அவ்வகையார் வீரமுஷ்டி என்றும் வீரபத்திரர் என்றும் குறிக்கப்பெறுவர்.

இது இறக்குவான் வழி வழி எச்சம் அறுவான்: இந்தத் தர்மத்தைக் கெடுப்பவன் வம்சம் அற்றுப் போவான்.

'ஏழுவழி எச்சம் அறுவான்' என்றும் குறிக்கப்படுவது உண்டு.

குடம்கொண்டு கோயில் புகுவான் காப்பதாக : கோவிலுக்கான இந்தத் தர்மத்தை அந்த அந்தக் காலத்தில் பூசை புரிபவர் யாவரேயாயினும் அவர் காத்து ரக்ஷிப்பார்.

'குடமும் குச்சியும் கொண்டு கோயில் புகுவான்' என்றும் சில சாசனங்களில் காணப்படும். 'இது பன்மாகேச்வர ரக்ஷை' என்று சோழர்களுடைய பழைய சாசனங்களில் காண்பதும் இதனையே குறிக்கும்.

நிலங்களை விற்கும்போதும் தானம் செய்யும்போதும் அவற்றைப் பெறுகிறவன் எந்த எந்த உரிமைகளையும் அடைகிறான் என்பதைக் குறிப்பதாகக் காணும் வாசகங்கள்.

உடும்போடி ஆமைதவழுவது :

புற்றும் தெற்றியும் :

மேல் நோக்கிய மரமும் கீழ் நோக்கிய கிணறும்.

ஜல நிதி, தரு பாஷாண, அக்ஷிணி ஆகாமி, சித்த சாத்யமென்னப் பட்ட அஷ்ட போகங்களும், தேசஸ்வாமியங்களும் உள்பட :

இவை யாவும் ஒரே பொருளை உணர்த்துவன.

பணம் பெற்றுக்கொண்டு எல்லா உரிமைகளோடும் விற்றுக் கொடுத்ததைத் தெரிவிக்கும் வாசகங்கள்:

விலைக்குறவிற்றுப் பொருளறக் கைக்கொண்டு விற்று விலை யாவணம் செய்து கொடுத்தோம்.

இதுவே பொருள் மாவறுதிச்செலவோலையாகவும். இதுவல்லது வேறுபொருள் மாவறுதிச் செலவோலை காட்டடென்று சொல்லப்பெறுதா கவும்.

# பிற்சேர்க்கை IV

## சாசன சுலோகங்கள்

தானம் அளிப்பவர்களுக்குக் கிட்டும் புண்ணியம், அந்தத் தானத்தைக் கெடுப்பவர்கள் அடையும் பாபம், தானம் அளித்ததைப் பாதுகாக்க வேண்டிய முறை ஆகிய விஷயங்களைத் தெரிவிக்கும் பின் வரும் ஆறு சுலோகங்களும் சகஜமாகத் தான சாசனங்களில் காணப்படுகின்றன. அவை எல்லாம் சேர்ந்து இராது ; ஒன்றோ இரண்டோ மூன்றோ சந்தர்ப்பத்துக்கு ஏற்றபடியும் தானம் வழங்குபவர்களின் விருப்பப்படியும் சேர்க்கப்பட்டிருக்கும். இந்தப் புத்தகத்தில் அவை பல இடங்களில் தமிழ் எழுத்திலும் கிரந்த எழுத்திலும் பிழைகளுடன் காணப்படுகின்றன. அவற்றின் சரியான பாடமும் தமிழ் மொழி பெயர்ப்பும் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

𑌦𑌾𑌨𑌪𑌾𑌲𑌨𑌯𑍋𑌰𑍍𑌮𑌧𑍍𑌯𑍇
𑌦𑌾𑌨𑌾𑌚𑍍𑌛𑍍𑌰𑍇𑌯𑍋𑌽𑌨𑍁𑌪𑌾𑌲𑌨𑌮𑍍 ।
𑌦𑌾𑌨𑌾𑌤𑍍𑌸𑍍𑌵𑌰𑍍𑌗𑌮𑌵𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿
𑌪𑌾𑌲𑌨𑌾𑌦𑌚𑍍𑌯𑍁𑌤𑌂 𑌪𑌦𑌮𑍍 ॥

தானம் செய்வது, அளித்த தானத்தைப் பரிபாலிப்பது, இவ்விரண்டினுள், தானத்தைக் காட்டிலும் பரிபாலனமே சிறந்தது. தானம் செய்வதால் சொர்க்கம் கிட்டுகிறது. பரிபாலனத்தாலோ வைகுந்தமே (அழிவற்ற ஸ்தானம்) கிட்டுகிறது.

𑌸𑍍𑌵𑌦𑌤𑍍𑌤𑌾𑌦𑍍𑌦𑍍𑌵𑌿𑌗𑍁𑌣𑌂 𑌪𑍁𑌣𑍍𑌯𑌮𑍍
𑌪𑌰𑌦𑌤𑍍𑌤𑌾𑌨𑍁𑌪𑌾𑌲𑌨𑌮𑍍 ।
𑌪𑌰𑌦𑌤𑍍𑌤𑌾𑌪𑌹𑌾𑌰𑍇𑌣
𑌸𑍍𑌵𑌦𑌤𑍍𑌤𑌂 𑌨𑌿𑌷𑍍𑌫𑌲𑌂 𑌭𑌵𑍇𑌤𑍍 ॥

தான் அளிப்பதைக் காட்டிலும் பிறர் கொடுத்ததைப் பரிபாலனம் செய்வது இரு மடங்கு புண்ணியத்தைக் கொடுக்கும். பிறர் அளித்ததை அபகரித்தாலோ தான் கொடுத்ததும் பலன் அற்றதாக (நிஷ்பலமாக)ப் போய் விடும்.

𑌸𑍍𑌵𑌦𑌤𑍍𑌤𑌾𑌂 𑌪𑌰𑌦𑌤𑍍𑌤𑌾𑌂 𑌵𑌾
𑌯𑍋 𑌹𑌰𑍇𑌤 𑌵𑌸𑍁𑌨𑍍𑌧𑌰𑌾𑌮𑍍 ।

ஷஷ்டிவஷ-ஸஹஸ்ராணி
விஷ்டாயாம் ஜாயதெ க்ருமி: ||

தான் கொடுத்ததாயினும், பிறர் கொடுத்ததாயினும், ஒருதரம் கொடுத்த தானத்தைக் கைப்பற்றுகிறவன் இந்தப் பூமியிலே அறுபதினாயிரம் வருஷம் புழுவாகப் பிறந்து உழல்வான்.

ஸாமாந்யோயம் ஹமிநீ ரொகெ
ஸவெஷாமெவ ஹூஹுஜாம் |
ந லோஜ்யா ந கரக்ராஹ்யா
விஷ்ணுதத்தா வஸுந்தரா ||

இவ்வுலகத்து அரசர்கள் எல்லோருக்கும் உடன் பிறந்தவள் ஒருத்தியே யாக விளங்குபவள் பூமிதேவி. அதனால் விஷ்ணுவுக்காக அளிக்கப்பட்ட இந்தப் பூமி, பிறர் அனுபவிப்பதற்கும் கைப்பற்றுவதற்கும் உரிமையற்றது.

[இந்தச் சுலோகத்தின் நாலாவது அடியில் வரும் சொல்லை விஷ்ணு ஆலயத்துக்கோ சிவன் கோவிலுக்கோ பிராமணர்களுக்கோ தானமாக அளிக்கும்போது சந்தர்ப்பத்திற்கு ஏற்றபடி விஷ்ணுதத்தா, தேவதத்தா, விப்ரதத்தா, பிரம்மதத்தா என்று மாற்றி அமைத்து விடுவது வழக்கம்.]

ஆதித்ய சந்த்ராவநிலோநலஶ்ச
த்யௌர் பூமிராபோ ஹ்ருதயம் யமஶ்ச |
அஹஶ்ச ராத்ரிஶ்ச உபே ச ஸந்த்யே
தர்மஶ்ச ஜாநாதி நரஸ்ய வ்ருத்தம் ||

சூரியன், சந்திரன், நெருப்பு, காற்று, ஆகாயம், பூமி, நீர், இதயம் (உள்ளம்), யமன், பகல், இரவு, இவ்விரண்டும் கூடும் இரு சந்தியா காலம், தர்மம் ஆகியவர்கள் மனிதனுடைய வரலாற்றை (நடத்தையை) அறிகிறார்கள்.

யஸ்மிந்நேதஸ்ய யோ விக்நம்
கரோதி ஸ பாபாத்மவாந் |
கங்காயா: கபிலாம் ஹந்யா:
யோ தோஷ ஸ்தமவாப்நுயாத் ||

இந்தத் தர்மத்தைத் தடை செய்யும் ஒருவன் கங்கைக் கரையிலே கபிலைப் பசுவைக் கொன்ற பாபத்தை அடைவான்.

பின் வரும் மூன்று சுலோகங்கள் பெரும்பாலும் விஜயநகர சாசனங்களின் ஆரம்பத்திலே கடவுள் வணக்கமாகக் காணப்படுபவை.

𑌨𑌮𑌸𑍍𑌤𑍁𑌙𑍍𑌗 𑌶𑌿𑌰𑌶𑍍𑌚𑍁𑌮𑍍𑌬𑌿
𑌚𑌨𑍍𑌦𑍍𑌰 𑌚𑌾𑌮𑌰 𑌚𑌾𑌰𑌵𑍇 ।
𑌤𑍍𑌰𑍈𑌲𑍋𑌕𑍍𑌯𑌨𑌗𑌰𑌾𑌰𑌮𑍍𑌭
𑌮𑍂𑌲𑌸𑍍𑌤𑌮𑍍𑌭𑌾𑌯 𑌶𑌮𑍍𑌭𑌵𑍇 ॥

சாமரம் போன்ற சந்திரனைத் தலையிலே அழகாகத் தரித்திருப்பவரும் மூவுலகங்களிலும் உள்ள நகரம் கிராமம் முதலியவற்றின் சிருஷ்டிக்கு ஆதாரமான தூணாக (மூலஸ்தம்பமாக) இருப்பவருமான சம்பு என்னும் ஈசுவரனை வணங்குகிறேன்.

𑌹𑌰𑍇𑌰𑍍𑌲𑍀𑌲𑌾𑌵𑌰𑌾𑌹𑌸𑍍𑌯
𑌦𑌂𑌷𑍍𑌟𑍍𑌰𑌾𑌦𑌣𑍍𑌡𑌸𑍍𑌸 𑌪𑌾𑌤𑍁 𑌵𑌃 ।
𑌹𑍇𑌮𑌾𑌦𑍍𑌰𑌿𑌕𑌲𑌶𑌾 𑌯𑌤𑍍𑌰
𑌧𑌾𑌤𑍍𑌰𑍀𑌚𑍍𑌛𑌤𑍍𑌰𑌶𑍍𑌰𑌿𑌯𑌂 𑌦𑌧𑍌 ॥

வராக அவதாரம் எடுத்து விளையாட்டாகப் பூமியைத் தூக்கித் தன் தந்தத்தால் தாங்கி நின்றபோது அந்தத் தந்தமே பிடியாகவும், பூமியே பொற் கலசமாகவும் அடைந்து குடை பிடித்தாற்போல் விளங்கிய விஷ்ணு காப்பாற்றட்டும்.

𑌕𑌰𑍀𑌣𑌾𑌯𑌾𑌸𑍍𑌤𑍁 𑌨𑌜𑌾𑌤
𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑍂𑌹𑌤𑌿𑌮𑌿𑌰𑌾𑌪𑌹𑌃 ।
𑌯𑌶𑍍𑌚𑍋𑌜𑍋𑌵𑍍𑌯𑌮𑌜𑍋𑌜𑍍𑌜𑌾𑌤𑌂
𑌹𑌰𑌿𑌣𑌾𑌪𑌿 𑌚 𑌪𑍂𑌜𑍍𑌯𑌤𑍇 ॥

யானை உருவம் பெற்றிருப்பினும் யானையினின்றும் பிறக்காதவரும் [அகஜா என்னும் பார்வதியினிடம் பிறந்தவரும்] யானைக்கு விரோதியான சிங்கமே வணங்கும்படியானவரும் [விஷ்ணுவினாலும் பூசிக்கப்படுபவரும்] ஆன கணபதி எல்லா விக்கினங்களையும் போக்கி நன்மை பயப்பாராக.

[இந்தச் சுலோகம் சிலேடையாக அமைந்துள்ளது.]

# ADDITIONS AND CORRECTIONS

## குறிப்பும் திருத்தமும்

3 வெத்தானம் என்பது நீர் வார்க்காமல் கொடுக்கப்படும் தானம் ஆகும். பிரதிப் பிரயோஜனத்தை எதிர்பார்க்காமல் அளிக்கப்படும் தானத்தைக் குறிக்கும்.

**71** The verse at the end of this inscription has been copied separately as No. 299 of 1940. It is stated that the characters are of the 13th century A.D. and the record states that Nallūr granted by the king Kulōttuṅgachōḻa to the temple of Kanakachchinagiri Appar is a sacred ground.

கீழ்க்குறிப்பாகக் கொடுத்துள்ள செய்யுளில், இரண்டாவது அடியில் 'கனகச் சினகிரி அப்பர்' என்றும், மூன்றாவது அடியில் 'சோழன் கொடுத்த நல்லூர்' என்றும் வாசிக்க வேண்டும்.

**73** This has been copied as No. 310 of 1940, where the regnal year of the king is given as the 16th. It is an uufinished record registering the gift of land under Kundavai-ēri (tank) as *śivigaip-puṟam* (palanquin maintenance).

கீழ்க் குறிப்பு 3. 'சிவிகைப் புறமாக' என்று இருக்க வேண்டும்.

4. 'குந்தவை ஏரியின் கீழ் உடைப்பின் பாடு திருத்தி விட்ட நிலத்தில்' என்பதனோடு சாசனம் அபூர்த்தியாகவே நின்று விடுகிறது.

74 This has been registered as No. 313 of 1940, wherein, the regnal year of the king is given as 5.

**77** Registered as No. 314 of 1940 as dated in the 3rd regnal year of Sakalabhuvana chakravartin Peruñjiṅgadēva. The name of the donor is givin as......śingan, a native of Pālaiyūr.

**80** Probably same as No. 311 of 1940 dated in the 4th regnal year of Tribhuvana chakravartin Kulōttuṅgachōḻadēva recording an endowment of 420 *kalam* of paddy by the measure *Āṭkoṇ-ḍān-marakkāl* out of the annual *pāḍikāval* income from the village Ja[na*]nātha-maṅgalam by Āḷappiṟandān Mōgan *aḷias* Kulōttuṅga śōḷa-Kāḍavarāyan for offerings to (the image of) Kachchi-Nāyanār.

Cf. No. 314 of 1940, in characters of the 13th century A.D. stating that the image of Kachchi-Nāyakar was endowed by Aḷappiṟandān Mōgan Kachchiya[rāyar*] at Tirunaṟuṅgoṇḍai.

**82** (அ) Registered in No. 303 of 1940. The characters are said to be of about the 16th century A.D. It is given therein that Guṇabhadrāchārya was also called Vīrasaṅghapratishṭhāchāryan.

**82** (ஆ) Registered as No. 305 of 1940. Built in at the right end. The characters belong to about the 13th century A.D.

**113** Read the last note as (vide No. 51 in page 62 above.)

**125** இதன் தலைப்பில் 'தேசூர்' என்னும் ஊர்ப்பெயர் இருக்கவேண்டும்.

Add the name of the village 'Dēśūr' at the top.

**139** இது செந்தமிழ் 5–ஆம் வெளியாகியுள்ளது.

**350** This has been published in the *South Indian Inscriptions* (*Texts*), vol. VII as No. 58.

**502.** Registered as No. 111 of 1933.

**503.** Registered as No. 115 of 1933. The date of the record has been read as the 1[6]th year, [Mithuna].

**504.** Registered as No. 114 of 1933.

**505** This has been copied by the Epigraphy Department as No. 113 of 1933 and the record is of time of **Rajanarayana Sambuvaraya.**

**746** Registered as No. 384 of 1940. [copied from the inner wall of the outermost gōpura in the Ujjīvanātha temple at Uyyakkoṇḍān-Tirumalai].

**755** Registered as No. 390 of 1940. [on the south wall of the maṇḍapa in front of the central strine in the Madhyārjuna temple]. Built in at the ends of lines and incomplete. Record dated in Śaka 1***, Kīlaka, Mithuna, ba, daśami, Monday, Aśvati in the reign of the Vijayanagara ruler **Devaraya** [Mahārāya] son of Vira Vijaya rāya. Mentions the re-consecration of two temples, viz., Avanīśvara and Tiruvakkīśvara, while renovating the temple of Marudāntīśvaram-uḍaiya-Nāyanār at Rājēndraśōḷa-pēṭṭai in Śūralūr-kūṟṟam, a sub-division of Rājagambhīra-vaḷa-nāḍu, by the *nagarattār* of the place, who also made provision for worship in them.

# பிற்சேர்க்கை - V

## மெய்க்கீர்த்தி விவரம்

தமிழ் நாட்டு மன்னர்களுடைய சாசனங்களிலே மெய்க்கீர்த்தி முக்கியமான பகுதி. ஒவ்வோர் அரசனுக்கும் தனித் தனியாக வழங்கிவந்த அம்மெய்க்கீர்த்தியிலே சிலருக்கு ஒன்றுக்கு மேற்பட்ட மெய்க்கீர்த்திகளும் உண்டு. அத்தகைய மெய்க் கீர்த்திகளிலே பின்வருபவை இந்தத் தொகுப்பில் காணப் படுகின்றன.

### சோழ மன்னர்கள்



### பண்டிய மன்னர்கள்

# APPENDIX VI

—: (o) :—

ABSTRACT of inscriptions for which only summaries are given in the fore-going pages, their texts having been published elsewhere.

The following abbreviations are used :

**S. I. I.** **The South Indian Inscriptions**

[13 volumes have been published so far. Of these, the first three contain the text and translation with detailed introduction and notes. The next five volumes, Nos. IV to VIII, contain only the texts. Nos. IX to XI are in Telugu and Kannaḍa. The other two volumes, No. XII and XIII, contain the texts with introductory notes.]

**E. I.** **Epigraphia Indica.**

**2.** On the southern side of the eastern gōpura in the second prākāra of the Vīraṭṭānēśvara temple at Tiruvadigai. Undated and incomplete record of the reign of Sakala bhuvana chakravartin **Avani Alappirandan Kopperunjinga.** Seems to register the gift of 15 *mā* of land in Śiṟuvākūr, a village in Śēndamaṅgalap-paṟṟu, belonging to Vallavarāyan Thoṭṭamān Sōmanāthadēva, to god Tiru-vīraṭṭānam-Uḍaiyar of Tiruvadigai. Published in *S.I.I.*, vol. VIII, as No. 334.

**21.** On the north wall of the first prākāra in the temple of abhānātha at Chidambaram. Record in prose and verse dated in the 44th year, Mīna, Friday, Rōhiṇi, corresponding to A.D. 1114, March 13, in the reign of the Chōḷa king Tribhuvana chakravartin **Kulottunga Chola** (I), who is also referred to as **Jayadhara** in the verse, registering the gift of a gold vessel for offering drinking water to god by Rājarājan Kundavvai Āḻvār, the illustrious (younger) sister of the king. It also records the fixing up of the precious stone

offered to Rājēndra Chōḷa by the Kambhōja king, as a mirror to the god. Published in *E.I.*, vol. V, p. 105.

**34.** On the base of the south wall of the mahāmaṇḍapa in front of the central shrine in the Oppilāmaniśvara temple at Araganḍa-nallūr. Record dated in the 3rd year of the reign of Tribhuvana chakravartin **Kopperunjingadeva** registering the gift of the village Śembiyanmādēvi, in Meykunṟa-nāḍu, on the southern bank of the river Peṇṇai, to meet the expenses of offerings, sacred paste, lights, etc. to god Opporuvarum-illāda-Nāyanār of Tiruvaṟaiyaṇinallūr by Chōḷa-tuṅgap-pallavaraiyan Śrīpāla-dēvan Marutāndāḷvār *alias* Rājarāja Śrīpālan, the chief of Pērāyil in Kaṇṇuḍainallūrp-paṟṟu. The gift village was included in his domain. Published in the *S.I.I.*, vol. XII, as No. 137.

**36.** On the base of the west wall of the central shrine in the same temple. Record dated in the 14th regnal year of **Kopperun-jinga** stating that the tank-bund which had been in ruins for a long time was rebuilt by Nāgattambaiyan Eḍuttapādam paḍiyān, a merchant of Tirukkōvalūr, at the instance of the *sthānattār*, who granted the merchant 2000 *kuḷi* of land as *kāṇi*. Published in the *S.I.I.*, vol. XII, as No. 226, wherein the regnal year of the king is given as [2]4.

**37.** On the base of the south wall, near the image of Dakshiṇā-mūrti, of the same shrine. Record dated in the 8th year of the reign of the Pāṇḍya king Māṟavarman *alias* Tribhuvana chakra-vartin **Vikramapandyadeva** registering the tax-free (*iṟaiyili*) gift of the income on half of the village which he had obtained by right, to meet the expenses of daily worship and conduct of the service *Rājākkaṇāyan sandi* which he had instituted in the name of the king in the temple of Opporuvarum-illāda-Nāyanār at Tiruvaṟaiyaṇi-nallūr. Published in *S.I.I.*, vol. VII, as No. 1018.

**38.** On the base of the south wall (eastern sector) of the same shrine. Record dated in the 32nd year of the reign of the Chōḷa king Tribhuvana chakravartin **Kulottungacholadeva** stating that Tirukkāḷatti-uḍaiyān Āḍuvān *alias* Paṭṭaṇasvāmin, the headman of Āttambūr in Vaḍa (North) Veḷḷāṟṟuk-kūṟṟam, in Paṇḍya-maṇḍalam built of stone the temple of Opporuvarum-illāda-Nāyanār at Tiru-vaṟaiyaṇi-nallūr. Published in *S.I.I.*, vol. VII, as No. 1019.

**39.** On the base of the north wall of the ardhamaṇḍapa in front of the same shrine. Record dated in the 2nd regnal year of the Pāṇḍyan king Tribhuvana chakravartin **Vikrama Pandyadeva** registering the tax-free gift as *iṟaiyili tirunāmattukkāṇi* of the village

Dēvanūr *alias* Vikrama pāṇḍya-nallūr, in Uḍaikkāṭṭu-nāḍu on the northern bank of the river Peṇṇār, a sub-division of Vāṇakōppāḍi *alias* Rājarāja-vaḷanāḍu, to meet the expenses of offerings, worship sacred paste, etc. and conducting the *Rājākkaṇāyan* festival instituted in the name of the king in the temple of god Opporuvarum-illāda-Nāyanār. Published in *S.I.I.*, vol. VII. as No. 1023 where the regnal year of the king is given as 8.

**41.** To the north of the entrance into themukha-maṇḍapa in the second prākāra (opposite to kitchen) of the Vīraṭṭānēśvara temple at Kiḷūr. Record beginning with the *meykkīrtti*, 'Pūmēvu vaḷar' etc. and dated in the 5th year of the reign of the Chōḷa king Rājakēsarivarman *alias* Tribhuvana chakravartin **Kulottunga-choladeva** registering the gift of 1½ *vēli* of land through the assembly (*sabhā*) of the village by Malaiyan Malaiyan *alias* Kulōttuṅga chōḷachchēdiyarāyan, the Malaiyamān chief of Kiḷiyūr to meet the expenses of taking in procession, on every Sunday, the god Tiruppaḷḷiyaṟai-Āḷuḍaiyār in the temple of god Tiru-vīraṭṭānam-uḍaiyār of Tirukkōvalūr in Kuṟukkaik-kūṟṟam, a sub-division of Malāḍu *alias* Janaṉātha vaḷanāḍu. Published in *S.I.I.*, vol. VII, as No. 913.

**47.** On the east wall (southern side) of the same shrine in the inner-most prākāra. Record beginning with the *meykkīrtti*, 'Tirumanni vaḷara' etc. and dated in the 6th regnal year of the Chōḷa king Parakēsarivarman **Rajendracholadeva** (I) registering the gift of a gold plate by Rāman Mummuḍiśōḷan *alias* Rājēndraśōḷa-Miḷāḍuḍaiyān, the chief of Milāḍu, and of a gold handled fan by his (younger) brother Rāman Maṟavaḍigal *alias* Muḍikoṇḍaśōḷa Milāḍuḍaiyān to god Tiruvīraṭṭānam-uḍaiya-Mahādēva at Tirukkōvalūr in Kuṟukkaik-kūṟṟam, a sub-division of Milāḍu *alias* Jananātha-vaḷanāḍu. Published in *S.I.I.*, vol. VII, as No. 888.

**48.** On the east wall of the central shrine in the same temple. Record beginning with the *meykkīrtti*, 'Tirumanni vaḷara' etc. and dated in the 6th year of the Chōḷa king Parakēsarivarman **Rajendra choladeva** (I) registering the gift of 98 sheep for burning a perpetual lamp in front of god Tirukkōvalūr-uḍaiya-Mahādeva by Kulāttuḷān Kūttan Karumāṇikkam *alias* Kēraḷāntaka Mūvēndavēḷān of Puḷiyambākkam in Uṟṟukkāṭṭuk-kōṭṭam, a sub-division of Jayaṅkoṇḍaśōḷa maṇḍalam. Published in *S.I.I.*, vol. VII, as No. 860, wherein the regnal year of the king is given as 5.

**49.** On the north wall of the central shrine in the same temple. Record beginning with the *meykkīrtti*, 'Tirumagaḷ pōḷa' etc. and

dated in the 17th year of the Chōḷa king Rājakēsarivarman (*i.e.*, **Rajaraja** I) registering the gift of 96 sheep for a perpetual lamp to Tiruvīraṭṭānam-uḍaiyār by Iñjippāṟanaṭṭan Rāman Āṇḍār. Published in *S.I.I.*, vol. VII, as No. 871.

**50.** On the same wall. Record dated in the 21st year of the reign of the Pallava king Vijaya **Nripatunga Vikrama** registering the gift of 12 *kaḷañju* of gold by Nannan Koṟṟan, a servant (*aṟām-uṇṇum*) of Vēṭṭuvadaraiyar, for a perpetual lamp to god Mahādēva of Tiruvīraṭṭānam. Published in.*E.I.*, vol. VII, p. 139.

**51.** On the same wall. Record dated in the 17th year of the reign of the Pallava king Vijaya Vikrama **Nandi Vikrama** registering the gift of 15 *kaḷañju* of gold for a perpetual lamp in front of god Tiruvīrāṭṭānattup-perumān by the concubine of Kōnakkanār Vāṇakōvaraiyar who was the son of Māṇikkattār. Published in *E.I.*, vol. VII, p. 139. Therein the donor is described as Kōnakkanār, the daughter of Māṇikkattār and the concubine of Vāṇakōvaraiyar.

**52.** On the east wall of the same shrine. Record beginning with the *meykkīrtti*, "Tirumanni vaḷara" dated in the 6th year of the reign of the Chōḷa king Parakēsarivarman *alias* **Rajendrachola-deva** (I) registering the tax-free (*iṟaiyili*) gift of 7½ *mā* of land under the irrigation of the tank Rājavijjādarappērēri to three persons looking after the flower garden, Rājēndrasōḷan *nandavānam*, of the temple of Tiruvīraṭṭānattu-Mahādēva at Tirukkōvalūr, by the assembly (*ūr*) of Marudūr in Kuṟukkaik-kūṟṟam, a sub-division of Malāḍu *alias* Jananātha-vaḷanāḍu. Published in *S.I.I.*, vol. VII, as No. 889.

**53.** On the north wall of the same shrine. Record beginning with the *meykkīrtti*, "Pugaḷ māḍu viḷaṅga" and dated in the 6th year of the reign of the Chōḷa king Rājakēsarivarman *alias* **Kulottungachola I** registering the remision of all taxes on the village Ariyūr by Kiḷiyūr Malaiyamān Periya-uḍaiyān *alias* Rāja[rāja*]chēdiyarāyan to meet the expenses of daily worship and the Kārttigai festival of the god Tiruvīraṭṭānam-uḍaiya-Nāyanār. Published in *S.I.I.*, vol. VII, as No. 874.

**54.** On the same wall. Record beginning with the *meykkīrtti*, "Tirumagaḷ pōla" and dated in the 10th year of the reign of the Chōḷa king **Rajakesarivarman (Rajaraja Chola** I) registering the tax-free grant of 10 *mā* of land by the *sabhā* of the *brahmadēya* village of Tirukkōvalūr for offerings to god Kōval-viṭaṅkar of Tiruvīraṭṭānam

Published in *S.I.I.*, vol. VII, as No. 878 where the regnal year of the king is given as 18.

**55-56.** On the south wall of the central shrine in the temple of Āptsahāyēśvara at S'ēndamaṅgalam. Record dated in the 5th year of the reign of Sakalabhuvana chakravartin Śrī **Manavalan Perumal Udaiyar** registering the tax-free (*iṟaiyili*) gift of land as *tirunāmattukkāṇi* to meet the expenses of the service called 'Eḻiśai-mōgan-sandi', Puraṭṭāśi festival and perpetual lamp in the temple of Vāṇilaikaṇḍavīrēśvaram-uḍaiya-Nāyanār newly erected by him at Śēndamaṅgalam making the place a military station (*paḍaivīḍu*). Published in *S.I.I.* vol. VIII, as No. 350; also in *E.I.*, vol. XXIV, pp. 22-28.

**58.** On the tier of the mahāmaṇḍapa to north of entrance into the gōpura of the same temple. Record dated in Saka 1352, Saumya, Tulā, ba. ēkādaśi, Monday, Uttara in the reign of the Vijayanagara ruler Śrī Vīrapratāpa **Devarayar** registering the tax-free (*sarva-mānya*) gift of the two villages Kallaikkurichchi in Kallaikkuṟich-chipparru and Āṟṟūr in Śēṇgoṇḍānpaṟṟu of Vaḷudilampaṭṭu uśāvaḍi, to the temples of Uḍaiyār Āvattukkāttaruḷiya-Nāyanār and Durgā dēvi, the village-goddess at the southern gate of Śēndamaṅgalam in Tirumunaippāḍi nāḍu, a sub-division of Rājarāja-vaḷanāḍu in Naḍu-vil-maṇḍalam, to meet the expenses of worship, offerings, perpetual lamp, and special car festival on the day of the asterism Śatayam in the month of Paṅguni, for the removal of all troubles to the king. Published in *S.I.I.*, vol. VIII, as No. 349.

**59.** On the southern side of the inner face of the inner gōpura of the temple. Record dated in the 17th year, 186th day in the reign of the Pāṇḍyan king **Sundara Pandyadeva** registering the tax-free gift of the village [Śēndamaṅgalam] as ***tirunāmattukkāṇi-iṟaiyili*** to meet the expenses of offerings and the special festival and ***sandi*** 'Ellāntalaiyāna perumāḷ' instituted by the king in the temple of Vāṇilaikaṇḍavīrēśvaram-uḍaiya-Nāyanār, from the month of Tai of that year. Published in *S.I.I.*, vol. VIII, as No. 359.

**60.** At the same place. Incomplete and undated record of the reign of the Pāṇḍyan king Tribhuvana chakravartin Kōnērinmai-koṇḍān **Parakrama Pandyadeva** registering the tax-free gift as ***tirunāmattukkāṇi*** of the village Āttippaṭṭu to the south of Muḍiyūr in Tiruveṇṇainallūr-paṟṟu, a sub-division of Tirumunaippāḍi-nāḍu, in Naḍuvil-maṇḍalam by Śrīraṅganātha Nāyaka to meet the expen-

ses of perpetual lamp, and the special festival and *sandi* named 'Gandara ganda' in the temple of Vāṇilaikaṇḍēśvaram-uḍaiya-Nāyanār. Published in *S.I.I.*, vol. VIII, as No. 355.

61. On the tier to the north of the mahāmaṇḍapa in the same temple. Record dated in the 6th regnal year, Āḍi 5, of the Pāṇḍyan king Tribhuvana chakravartin Kōnerinmaikoṇḍān **Vira Pandyadeva** registering the tax-free gift of the village Tulāmpūṇḍi, to the south of the river Gaḍilam, to meet the expenses of the *sandi* and festival instituted as 'Bhūmiputran' in the name of the king, in the temple of Vāṇilaikaṇḍīśvaram-uḍaiya-Nāyanār at Śēndamaṅgalam in Āḍa-nūr-paṟṟu, a sub-division of Kuṟukkaik-kūṟṟam in Milāḍu *alias* Jananātha vaḷanāḍu. Published in *S.I.I.*, vol. VIII, as No. 353.

63. On the gōpura of the same temple. Record stating that the village of Koṭṭaiyūr in Maṇḍipurap-paṟṟu in Iṟaiyānaṟaiyūrp-paṟṟu was granted tax-free from the Tai month of the 17th year to meet the expenses of 5 perpetual lamps, festival named 'Ellāntalai yanaperumāḷ' and the *sandi* named 'Ayyan-aṅkakāra' in the temple of god Vāṇilaikaṇḍa vīrīśvaram-uḍaiya-Nāyanār. The name of the king is not found. But Neṭṭūr-uḍaiyān figures as the signatory. This probably belongs to the time of the Pāṇḍyan king Jaṭāvarman **Sundara Pandyadeva.** Published in *S.I.I.*, vol. VIII, as No. 383; where the name of the gift village is given as "Ko[mb]aiyūr."

65. On the base of the north wall in the second prākāra of the Trivikrama-perumāḷ temple at Tirukkōvalūr. Record with the Sanskrit *praśasti* 'Samastabhuvanaikavīra' and dated in the 8th year, Dhanus, ba. ashṭami, Friday, Hasta in the reign of the Pāṇḍyan king **Vikrama Pandyadeva** registering the tax-free gift of 2068 *kuḷi* of land to maintain a perpetual lamp to illuminate the face of the god Tiruviḍaikaḻi Nāyanār at Tirukkōvalūr by Guṇanallulān Araiyan Tiruvalañjuḻi-uḍaiyān Aḻagapperumān *alias* Kāḍupaṭṭi of Koṭṭiḷampākkam for the merit of the king. Published in *S.I.I.*, vol. VII, as No. 123, where it is stated that the record is found on the north wall of the first prākāra.

67. On the base of the north wall in the second prākāra in the same temple. Undated and incomplete record registering the decision of the assembly known as **Chittirameli-Periyanattavar** to pay *padakku* paddy per plough and one *kuruṇi* paddy per member of their community to god 'Perumāḷ who was pleased to take his stand at Tiruviḍaikaḻi,' otherwise known as Chittiramēḻi-viṇṇagar of the 79 *nāḍu* and the 18 *bhūmi* at Tirukkōvalūr in Milāḍu *alias* Jananātha vaḷanāḍu. Published in *S.I.I.*, vol. VII, as No. 129.

**72.** On the north wall of the Chandranātha (Jain) temple at Tirunarunkoṇḍai. Record dated in the 3rd year of Tribhuvana chakravartin **Konerinmaikondan** registering the tax-free (*iṟaiyili*) gift as *paḷḷichchandam* of 10 *vēli* of land in S'irus'attanallūr for the worship of the Tirunarunkoṇḍai-*paḷḷi* and the goddesses [bhaṭārikas] referred to in the inscription as *Amaṇpiḍārikaḷ*. Published in *S.I.I.*, vol. VII, as No. 1012.

**86.** On the base of the south wall of the ardha maṇḍapa in front of the central shrine in the temple of Vriddhagirīs'vara at Vriddhāchalam. Record dated in the 22nd year, Mēsha, ba. daśami, Monday, Aviṭṭam in the reign of the Chōḷa king Tribhuvana chakravartin **Kulottungacholadeva** registering the gift of 100 cows by Kūḍal Eḷis'aimōgan Maṇavāḷapperumāḷ *alias* Vāṇilaikaṇḍaperumāḷ *alias* Rājarāja-Kāḍavarāyan for bathing the god Tirumudukunṟam-uḍaiyār with milk. Published in *S.I.I.*, vol. VII, as No. 146. There the regnal year of the king is given as 28.

**87.** At the same place. Record dated in the 5th year of Sakalabhuvana chakravartin **Kopperunjingadeva** registering the gift of a golden mango-sprout (jewel) to the god Tirumudukunṟam-uḍaiya-Nāyanār by Tēvum-tiruvum-uḍaiyāḷ *alias* S'embon Tyāgi Māṇikkam, daughter of Pākkār Āḷvi *alias* Pan-Māhēs'vara Naṅgai, a *devaraḍiyāl* in the temple. Published in *S.I.I.*, vol. VII, as No. 147.

**88.** At the same place. Another record dated in the 15th year of **Kopperunjinga** registering the gift of 90 sheep for a perpetual lamp in the temple by Tiruvagattīśvaram-uḍaiyan Uḍaiyān Muḍikoṇḍavēḷan of *dēvadānam* Ālachchukkuḍi. Published in *S.I.I.*, vol. VII, as No. 148 where the regnal year of the king is given as 8.

**89.** At the same place. Record dated in the 14th year of the reign of the Chōḷa king Tribhuvana chakravartin **Rajarajadeva** registering the gift of 90 sheep for a perpetual lamp in the temple of Tirumudukunṟam-uḍaiya-Nāyanār by Edirikaṇāyan Pottappich-chōḷan, one of the *agambaḍi-mudali* of the Pallava Kopperuñjinga. Published in *S.I.I.*, vol. VII, as No. 149.

**92.** On the northern side of the gōpura of the second prākāra in the same temple. Record dated in the 10th year of the reign of Sakalabhuvana chakravartin **Kopperunjinga** registering the gift of 200 cows to god Tirumudukunṟam-uḍaiya Nāyanār by Avani-Ālap-piṟandān *alias* Kōpperuñjinga of Kūḍal in Kīḷamur-nāḍu, a sub-

division of Tirumunaippāḍi for bathing the god with milk, and ghee and also made a gift of a gold forehead-plate (*paṭṭam*) set with stones, in expiation of the sin of having killed the Hoysaḷa *daṇḍa-nāyakas*, Kēs'avan, Hariharan and others and captured their ladies and treasures at Perambalūr. Published in *S.I.I.*, vol. XII, as No. 124.

**95.** On the north wall of the kitchen to the south of the *san-nidhi* in the same temple. Record dated in the 16th year of **Kop-perunjinga** registering the gift of 90 sheep by Aruḷāḷan Tyāgavinō-dan, son of S'ōlaikkōn and the chief of Jananātha chaturvēdimaṅ-galam *alias* Viḻuppuram for burning a perpetual lamp in front of god Tirumudukunṟam-uḍaiya-Nāyanār. The liquid measure *Devā-śiriyan nāḻi* is mentioned. Published in *S.I.I.*, vol. VII, as No. 192.

**107.** On the wall of the Sabhāpati shrine in the north prākāra of the Aruṇāchalēśvara temple at Tiruvaṇṇāmalai. Record dated in the 1st (which is a mistake for the 9th) year in the reign of Sakalabhuvana chakravartin **Kopperunjinga** assigning all the minor taxes (*āyam*) collected in all the *dēvadāna* villages, as in the 8th year, to the temple of god Tiruvaṇṇāmalai-uḍaiya-Nāyanār from the Puraṭṭāśi month of the 9th year as ordered by Aiyya-dēvar.

**111.** On the southern side of the Vallāḷarāyar gōpura (second prākāra). Record dated in the 22nd year, Kārttigai 13, in the reign of the [Pāṇḍyan] king Tribhuvana chakravartin **Sri Vallabhadeva** intimating the concession of non-collection of the principal from the *dēvaraḍiyārs* of the place. Published in *S.I.I.*, vol. VII, as No. 162.

**232.** On the south wall of the central shrine in the Muruga-nātha temple at Tirumuruganpūṇḍi. Record of **Konerinmaikon-dan,** the date of which is lost, registering the grant of 48 *kalam* of paddy, measured by *Rājakēsari*, in the village Pallōḍam *alias* Adirā-dirāja-nallūr in Vāyaṟaikkāl-nāḍu to Āṇḍār-Palaviḷakkappichchar, of the flower garden *Vīraśōḻan-tirunandavanam* of the god Tirumuru-gan-pūṇḍi-Nāyanār. Published in *S.I.I.*, vol. V, as No. 248.

**241.** On the south wall of the mahāmaṇḍapa in the temple of Toṇḍisvara otherwise known as Ārdrakapālīs'vara at Erode [Īrōḍu]. Record dated in the 4th year of the reign of the Koṅgu king Rāja-kēsarivarman *alias* Tribhuvana chakravartin **Ravi Kodai** *alias* [Kō] **Kalimurkha** registering the assignment of some land by Śokkan Vikkiramas'ōḻiyaraiyan, one of the *Veḷḷāḷan-piḷḷar* of Āvaṇipperūr in Pūvāṇiya-nāḍu to his son Akkan Sōman Māmaṇiyāḻvār on the

